தாயுமானவர் இயற்றிய

# மலைவளர் காதலி





விரிவுரை

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

15-4

தாயுமானவர் இயற்றிய

# மலைவளர் காதலி




ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின்
விரிவுரையுடன்


ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1983

15-4

# மலைவளர் காதலி

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண்டு எக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மை நின்தாவில்
கருத்தொன்றும் உண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானஆனந்த ஒளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனும் அகந்தைதீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் தங்கையே
வரைராஜனுக் கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

பொருள் ஒன்று. அது பல பாங்குகளில் தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது. இயற்கையில் அதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். நீர் என்னும் பொருள் ஒன்று. அது கட்புலனாகாத ஆவியாகக் காற்றில் கலந்திருக்கிறது. வெள்ளை வெளேரென்று நீராவியாக நீராவி எந்திரத்தினின்று அது வெளியே வருகிறது. பிறகு கார்மேகம், வெண்மேகம், செம்மேகம் ஆகியவைகளாக வானவெளியில் அது இலங்குகிறது. சற்று உறைந்த நிலையில் மூடுபனியாகவும், மஞ்சு ஆகவும்,

துளிப் பனியாகவும் திகழ்கிறது. அடுத்தபடி மழையாக அது பொழிகிறது. அதற்கும் அடுத்தபடி ஆலங்கட்டியாக அது வடிவெடுக்கிறது. ஹிமாசலம் போன்ற இடங்களில் உறைபனியாகவும் அது அமைந்திருக்கிறது. பொருள் ஒன்று எனினும் அதற்கு வடிவங்கள் இத்தனை இருக்கின்றன. இதே விதத்தில் பரவஸ்துவானது இக லோகத்திற்குரிய இத்தனையுமாக இலங்கிக் கொண்டிருக்கிறது. பரம்பொருளாயிருக்கிறபொழுது அது சுத்த சிவம் அல்லது சதாசிவம் அல்லது நிர்க்குண பிரம்மம். அதே பொருள் சகுண பிரம்மமாக இலங்கும்பொழுது அதற்குப் பார்வதி பரமேஸ்வரன் என்று பெயர். பார்வதி சமேதராயிருக்கிறபொழுது இம்மைக்குரிய ஜட வஸ்துக்கள் அனைத்துமாகவும், சேதன வஸ்துவாய் இலங்கும் ஜீவ கோடிகள் அனைத்துமாகவும் அவர் இலங்குகின்றார். ஜகத்தாகவும் ஜீவனாகவும் இலங்குகின்றபொழுது பிரகிருதித் தத்துவமாக இலங்குவது அம்பிகை; புருஷ தத்துவமாக இலங்குவது சிவம். சிவமும் சக்தியும் இரண்டு மூர்த்திகள் அல்லர். ஒரு பொருளின் இரண்டு நிலைகள் சிவ சக்தி என்று பெயர் பெறுகின்றன. தீ சிவம் என்றால் அதன் சுடுகிற தன்மை சக்தி. பால் சிவம் என்றால் அதன் வெண்மை நிறம் சக்தி. ரத்தினம் சிவம் என்றால் அதன் பிரகாசம் சக்தியாகிறது. இத்தகைய சிவசக்திக்குக் கணவன், மனைவி என்ற உலக இணக்கத்தைப் புராணம் கற்பித்திருக்கிறது. இதே அம்பிகை ஜடநிலையினின்று சேதன நிலைக்கு வருவதால் இவள் பர்வதராஜ புதல்வி அல்லது பார்வதி என அழைக்கப்பெறுகிறாள். வரை என்றால் மலை. வரை ராஜன் என்பது ஹிமவான் என்னும் இமயமலைக்குரிய பெயராகும். ஹிமவானின்

செல்வியாதலால் ஹைமவதி என்பதும் இவளுக்கு அமைந்துள்ள நாமமாகிறது. உயிர்களுடைய முன்னேற்றத்திற்குத் தேவையாயிருப்பவைகளை எல்லாம் அன்பு கூர்ந்து இவள் நல்கி வருகின்றாள் என்னும் கருத்து இப்பாட்லில் அமைந்திருக்கிறது.

'நதியுண்ட கடலெனச் சமயத்தை உண்ட பரஞான ஆனந்த ஒளியே' என்கிறார் தாயுமானவர். நெடுந்தூரத்திற்கப்பால் மலையில் உற்பத்தியாகிப் பாய்ந்து வருகிற நதியானது கடலில் சென்று ஒடுங்குகிறது. நதி என்னும் தன்னுடைய தனி வியக்தியையும் அது அப்பொழுது இழக்கிறது. அதே விதத்தில் வெவ்வேறு சமயங்களை அனுஷ்டித்துப் பரிபக்குவம் அடைகின்ற ஆத்ம சாதகர்கள் தங்கள் தனி வியக்தியைத் துடைத்து விட்டுப் பரவஸ்துவில் லயமாகின்றனர். அத்தகைய பரவஸ்துவாயிருப்பவள் அன்னை பராசக்தி. ஞானத்துக்கு அவள் இருப்பிடம். அவளே ஜீவகோடிகளனைத்திடத்தும் ஆனந்தமாக இலங்குகின்றாள். எங்கும் ஞானப் பிரகாசமாய்ப் பொலிந்து கொண்டிருப்பவளும் அவளே. ஓசைகளெல்லாம் அவளிடத்து அடங்கியிருப்பதால் அவள் நாதாந்த ரூபமாகப் போற்றப்படுகிறாள். வேதத்தின் அந்தம் வேதாந்தம். வேதங்களனைத்தும் பரவஸ்துவின் மகிமைகளை ஓதிக்கொண்டிருக்கின்றன. அந்த ஓசை ஒலிக்கெல்லாம் அப்பால் பரதேவதையாகிய அம்பிகை இருப்பதால் அவள் வேதாந்த மோனமே எனப் போற்றப் பெறுகிறாள். ஜீவாத்மன் தனது அகங்கார மமகாரத்தை ஒதுக்கி விட்டுப் பரம்பொருளில் ஒன்றுபடுவது குறிக்கோள். அப்போது அவனுடைய பிரக்ஞை பிரக்ஞானமாயிருக்கின்ற பரவஸ்துவில் இரண்டற்றநிலை எய்து

கிறது. இக்கோட்பாடு 'நான் எனும் அகந்தை தீர்த்து என் மதியுண்ட மதியான மதிவதன வல்லியே' என்பதில் அடங்கியிருக்கிறது. பூரணச் சந்திரனிடத்துத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. பார்க்கப் பார்க்கக் கண் கூசுவது சூரியனுடைய பாங்கு. பார்க்கப் பார்க்கக் கண் குளிர்வது சந்திரனுடைய பாங்கு. அத்தகைய இனிய பாங்கை அன்னை பராசக்தி படைத்திருப்பதால் அவள் மதிவதனு எனப் போற்றப் பெறுகிருள். நிறை நிலாவுக்கு நிகரான முகவிலாசத்தை உடையவள் என்பது இதன் பொருள். வல்லியே என்னும் சொல் பூங்கொடியே எனப் பொருள் படுகிறது. ஆக அன்னை பராசக்தி மதிவதன வல்லியே எனப் போற்றப்பெறுவது முற்றிலும் பொருத்தமாயிருக் கிறது. மதுசூதனன் தங்கையே — அம்பிகையைத் திருமா லின் சகோதரியாகக் கருதுவது புராணத்தின்போக்காகும். வரைராஜனுக்கு என்பது இமயமலை மன்னனுக்கு எனப் பொருள்படுகிறது. இருகண்மணியாய் உதித்த—சரீரத் தில் அமைந்துள்ள அவயவங்கள் அனைத்துக்கும் சோபை தருகிற இரண்டு கண்களின் மணிபோன்று அவதாரம் செய்திருப்பவளே என்பது இச்சொற்ருெடரின் உட் கருத்து. உமையே-உமாதேவியே. கறையுண்ட கண்டர் பால் அம்மை-உலகத்தை உய்வித்தல் பொருட்டு அதை விழுங்க வந்த விஷத்தைத் தாமே எடுத்து உண்டு அதைக் காப்பாற்றியதால் நீலகண்டன் என்னும் பெயர் தாங்கியுள்ள சிவபெருமானது இடப்பக்கம் இடம் பெற் றிருக்கின்ற தாயே, நின் தாளில் கருத்தொன்றும் உண் டாகுமேல்— உன்னுடைய திருவடிகளில் எனக்குப் பக்தி வாய்க்குமாருல் பிறகு எனக்குக் குறையேதுமில்லை. இகம், பரம் ஆகியவைகளில் எனக்கு என்னென்ன வாய்க்கு

மென்று ஆராய்ந்து பார்த்தால் பதியுண்டு-மண்ணுலகில் வசித்திருப்பதற்குப் பொருத்தமான வாசஸ்தலம் கிடைத்திருக்கிறது. நிதியுண்டு-இகலோக வாழ்க்கை இனிது நடைபெற வேண்டுமானால் அதற்குச் செல்வம் முற்றிலும் அவசியமானது. தேவையான செல்வம் தானாக எனக்கு வந்து வாய்க்கிறது. புத்திரர்கள்-மகப்பேறும்; மித்திரர்கள்-நண்பர்களும்; பக்கம்-உற்றார் உறவினரும்; உண்டு-எனக்கு வந்து வாய்க்கிறார்கள். எக்காலமும்-காலமெல்லாம்; பவிசுண்டு-வல்லமை படைத்தவனாக இருக்கிறேன். தவிசு உண்டு-ஆங்காங்கு அமர்வதற்கேற்ற ஆசன வகைகள் உண்டு. திட்டாந்தமாக-வெட்டவெளியாக; யமபடர் எனும் திமிரம் அணுகா—யம தூதர்கள் என்று இயம்பப்படுகிற அக்ஞான இருள்வந்து அணுகாதபடி; கதியுண்டு-மோட்ச சாம்ராஜ்யம் உண்டு. ஞானமாம் கதிருண்டு-சூரியப்பிரகாசத்துக்கு நிகரான ஆத்ம ஞானத்தெளிவு வந்தமைகிறது. கதிர் உண்டு-அழகு பொருந்திய மேன்மையுண்டு. காயசித்திகளும் உண்டு-உடல் வாழ்க்கையைச் சீர்கேடு அடையாதபடி நல்ல நிலையில் வைத்திருக்கின்ற ஒழுங்குப்பாடான வாழ்க்கை முறையும் தானே வந்தமைகிறது. இவையாவும் இகலோகத்துக்குரிய சம்பத்துக்களாகின்றன. பாரமார்த்திகப் பெருநிலை எனக்கு எப்படி வந்து வாய்க்கிறது என்று ஆராய்ந்து பார்க்கின், நான் என்னும் அகந்தை தீர்த்து என் மதியுண்ட-ஜீவபோதத்துக்கேதுவான சிற்றறிவு என்னிடத்திருந்து அகன்று போகும்படி செய்து நான் படைத்துள்ள அகங்காரத்தைத் துடைத்துத் தள்ளி விட்டுப் பரத்தில் இரண்டறக் கலக்கும்படி செய்கின்ற வல்லமை தாயே, உனக்கு உண்டு.

---

## மலைவளர் காதலி - 2.

தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையி லேநடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே

பொட்டிலே அவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே அடியிலேமேல்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு

நெட்டிலே அலையாமல் அறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற அன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுன்இருதாள்

மட்டிலே மனது செல நினதருளும் அருள்வையோ
வளமருவு தேவைஅரசே
வரைரா சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

குழந்தை ஒன்று விளையாட்டுக்குரிய பொம்மைகளில் பற்று மிக வைத்திருக்கிறது. பொம்மையோடு கூடிய வாழ்வே குழந்தைக்குப் பெருவாழ்வாகிறது. பொம்மை இல்லாவிட்டால் வாழ்வு தாழ்வுறுகிறது. ஆனால் உடலமைப்பிலும், மன அமைப்பிலும் வளர்ந்து வரவரக் குழந்தையொன்று பொம்மையில் வைத்துள்ள பற்றுதலை ஒதுக்கித் தள்ளுகிறது. பெரியவன் ஆனபிறகு அப் பொம்மையோடு கூடிய வாழ்வு அதற்குப் பொருளற்றதாகப் போகிறது.

மக்களுக்கு உலக வாழ்வு என்னும் பொம்மைகளை அன்னை பராசக்தி வேண்டியவாறு கொடுத்து உதவியிருக்கிறாள். பெரும்பாலோர் உலக வாழ்வில் பற்று உள்ளவர்களாகவே இவ்வையக வாழ்வை முடிவுக்குக் கொண்டு வருகின்றனர். அரிதிலும் அரிதாக யாரோ சிலர் பிரபஞ்ச வாழ்வானது குழந்தைகள் பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடுவதற்கு நிகர் என உணர்கின்றனர். அத்தகைய அறிஞர் வையகவாழ்வில் வாஞ்சை வைக்காது பாரமார்த்திகப் பெருவாழ்வுக்குத் தங்களை ஆயத்தப் படுத்துகின்றனர்.

மக்கள் வைத்துள்ள உலகப் பற்றுதல்களுள் காமம் என்னும் பற்றுதல் மிகக்கொடியது. வாழ்நாள் முழுதிலும் காமநோய்க்கு அடிமைப்பட்டவர்களாகவே அன்னவர் இருக்கின்றனர். அதைக் கடந்து மேலே வர அவர்களுக்கு இயலுவதில்லை. அவர்களுடைய மனப்பான்மை பெருங்காயம் போட்டு வைத்துள்ள பாத்திரத்திற்கு நிகரானது. பெருங்காயத்தைக் காலிபண்ணி பாத்திரத்தை எவ்வளவு துலக்கினாலும் பெருங்காயத்தின் நாற்றம் பாத்திரத்தை விட்டுப் போகாது. அத்தகைய பாத்திரத்தைத் தீயில் பழுக்கக் காய்ச்சி ஆறவைத்தால் தான் நாற்றம் அகலுகிறது. அங்ஙனம் ஆத்மசாதகர்கள் சிலருக்கு முன்பு பெற்ற காமவாசனை எளிதில் அகலுவதில்லை. பாத்திரத்தைப் பழுக்கக் காய்ச்சுவதற்கு நிகராக அவர்கள் கையாள வேண்டிய சாதனம் ஒன்று உளது.

பக்தி சாதனத்தில் ஈடுபடுகின்றவன் தன்னிடத்திலுள்ள கீழான இயல்புகளைக் குறித்துக் கவலைப்பட வேண்டியதில்லை. தன்னிடத்திலுள்ள சிற்றியல்புகள்

அனைத்தையும் தெய்வத்திடத்துத் திருப்பினால் அவை கள் பேரியல்புகளாக மாறுகின்றன. பொறுமைப் படுகிற ஒருவன் கடவுளைக் குறித்துப் பொறுமைப்பட வேண்டும். கோபித்துக்கொள்கிற ஒருவன் கடவு ளோடு கோபித்துக்கொள்ள வேண்டும். சண்டைபோடும் ஒருவன் கடவுளோடு சண்டைபோடவேண்டும். திட்டு கிற பாங்கிலுள்ள ஒருவன் வாய்க்கு வந்தபடி கடவுளைத் திட்டவேண்டும். இப்படியெல்லாம் செய்தால் மனித னால் அகற்ற முடியாத சிற்றியல்புகள் யாவும் பேரியல்பு களாக மாறியமைகின்றன.

இனி, காம நோயைப் பற்றி என்ன செய்யவேண்டும் என்பது கேள்வி. காம நோயில் வருந்துகிற மானுட னொருவன் தன்னைப் பெற்றெடுத்த தாயின் முன்னிலையில் சிறிது நேரத்துக்காவது அந்த நோயை விலக்கி வைக்க வல்லவனாகிறான். அதே விதத்தில் அன்னை பராசக்தி உபாசனையில் காமநோயை அகற்றுதற்கான உபாயம் ஒன்று உள்ளது. தன் மனதில் உதயமாகின்ற காமவெறி களை உள்ளபடி படம்பிடித்து அன்னை பராசக்தியின் முன்னிலையில் பக்தி பூர்வமாகப் படைத்தால் அக்காம நோய் தூய பக்தியாகத் திருந்தியமைகிறது. அதற் கேற்ற பாட்டாக அண்ணல் தாயுமானவர் இப்பாட்டைப் பாடியிருக்கின்றார்.

வலிய மடமாதர் தெட்டிலே என்னும் சொல்லடுக்கு வலிமை வாய்ந்த அறிவு குறைந்த வஞ்சகம் நிறைந்த பெண்பாலர் எனப் பொருள்படுகின்றது. தெட்டு என் னும் சொல் வஞ்சகத்துக்கு அல்லது ஏமாற்றுதலுக்கு ஆளாதல் எனப் பொருள்படுகின்றது. யார் ஒருவன் காம நோய்க்கு ஆளாகியிருக்கின்றானோ அவன் காமத்தை

நிறைவேற்றுதல் பொருட்டுக் காமக் கிழத்தி சொல்லு கின்ற சொல் அனைத்திலும் நம்பிக்கை வைக்கின்றான். பின்பு தெளிவடைந்த நிலையில் தான் ஏமாற்றமடைந்த தைச் சரியாகத் தெரிந்துகொள்கிறான். யாசிப்பவன் ஒருவன் கொடுக்கிறவனைவிட மெலிந்தவனாக நடந்து கொள்கிறான். கொடுக்கிறவனிடத்து ஒரு பைசா இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஏற்பவ னிடத்து அந்தப் பைசா இல்லை. அந்தச் சிறு காசை முன்னிட்டுக் கொடுக்கிறவன் வலியவன் ஆகின்றான். அதே விதத்தில் காமத்தை நிறைவேற்றுவதற்குக் காமி மாது ஒருத்தியை அணுகுகிறான். அந்த நெருக்கடியில் அவள் வலிவுபடைத்தவளாகவும் அவளை அணுகிய மனி தன் வலிவற்றவனாகவும் ஆகின்றார்கள்.ஆண்பாலரையும், பெண்பாலரையும் பொதுநிலையில் வைத்துச் சீர்தூக்கிப் பார்த்தால் அறிவுத் திறனில் ஆண்பாலர் பெண்பாலரை விட ஒருபடி மேலே இருப்பார்கள். அறிவில் பெண்பாலர் சற்றுப் பிந்தியிருப்பதால் அன்னவர்களை மடமாதர் என வர்ணிப்பது பொருத்தமாக இருக்கிறது. அறிவிலே இரண்டாந்தரத்திலிருப்பவர்கள் என இந்தச் சொல் தொடர் பொருள்படுகிறது. வாய்வெட்டிலே என்னும் சொல் தொடர் உதடு அமைப்பிலே எனப் பொருள்படு கிறது. காமத்துக்குக் கண் இல்லை என்பது கோட்பாடு. அழகற்றதையும் அழகுற்றதாகக் காமம் பொருள்படுத்து கிறது. ஆதலால் காமத்துக்கு அடிமைப்பட்டிருக்கிற ஒருவன் எந்த மாது இடத்துக் காதல் பூணுகிறானோ அந்த மாதுவின் உதடு அமைப்பில் விளக்கமுடியாத அழகைக் காண்கிறான். பொதுவாக ஆடவர் இடுப்புப் பெருத் தும், மாதர்கள் இடுப்புச் சிறுத்துமிருப்பது இயற்கையின்

பாங்கு. இந்தப் பாங்கைச் சிற்றிடையிலே என்னும் சொல் விளக்கிக் காட்டுகிறது. காமக்கண்கொண்டு பார்க்கின்ற வனுக்குக் காமக்கிழத்தியின் நடமாட்டத்தில் அழகு நிறைந்திருக்கிறது. அந்த இயல்பை நடையிலே என் னும் சொல் விளக்குகிறது. கண் அமைப்பிலே உள்ள அழகை மீன் அமைப்போடு ஒப்பிடுவது மரபு. நீரில் நீந்தும் மீன் இடையிடையே ஒளிர்ந்துகொண்டிருப்பது போன்று தென்படுகிறது. காண்பதற்கு அது கவர்ச்சி கரமானது. இப்பாங்கைச் சேலொத்த விழியிலே என்னும் சொல் தொடர் நன்கு தெரிவிக்கிறது. சேல் என்பது ஒருவகை மீன். புசிப்பதற்குப் பால் எல்லார்க்கும் இனி யது. பாலொத்த மொழியிலே என்பது காமத்துக்கு உட்பட்டிருப்பவனுக்குத் தான் காதலிக்கிற மாதுவிட மிருந்து வருகிற சொல் முழுவதும் இனியதாக இருக்கிற தென்பதைத் தெரிவிக்கிறது. அழகிய நெற்றியைச் சிறிய நிலாவோடு சீர்தூக்குவது மரபு. அக்கோட் பாட்டைச் சிறு பிறை நுதற் கீற்றிலே என்னும் சொல் லடுக்குத் தெளிவுபடுத்துகிறது. மாது ஒருத்திக்குப் புறத்திலுள்ள பொருள்கள் அலங்காரமாக வந்து அமை கின்றன. அப்படி அமைந்திருப்பவைகள் பொட்டிலே அவர் கட்டு பட்டிலே புனைகந்த பொடியிலே என விளக் கப்படுகின்றன. நெற்றியிலே வைக்கப்பட்டுள்ள குங்கு மப் பொட்டு, மாது ஒருத்தி அணிந்திருக்கும் பட்டுப் புடவை, அவள் மேலே பூசியிருக்கும் வாசனைத் திரவியங் கள் ஆகியவைகள் அவள் வீசுகிற கவர்ச்சியை அதிகப் படுத்துகின்றன. பாதத்தில் அவள் அணிந்திருக்கும் பாதசரத்தை அடியிலே என்னும் சொல் விளக்குகிறது. மேனி அமைப்பிலே பெண் ஒருத்தி பெற்றுள்ள பரிபக்குவத்தை மேல் பூரித்த முலையிலே என்னும்

சொல் தொடர் விளக்குகிறது. பூரித்த என்னும் சொல் முற்றிலும் வளர்ச்சியடைந்த என்று பொருள்படு கிறது. காதலி ஒருத்தி எந்த இடத்தில் எப்படி நின்று லும் அந்த இடத்தில் அந்தப் பாங்கில் காதலன் அழகு காண்கிறான் என்பதை நிற்கின்ற நிலையிலே என்னும் பதங்கள் தெளிவுபடுத்துகின்றன. காதலன் தன் அறிவு முழுவதையும் காதலியிடம் செலுத்துவதால் புந்திதனை நுழைய விட்டு என அச்செயல் விளக்கப்படுகிறது. ஆசைக்கு அடிமைப்பட்டு அதில் நெடுங்காலம் மனிதன் உழல்வதற்கேற்ப அவன் சிறுமை அடைகிறான். அப்படி அவன் சிறுமைப்படலாகாது என்னும் கோட்பாட்டை நெட்டிலே அலையாமல் என்னும் சொல்தொடர் எச்ச ரிக்கை செய்கிறது. மன்மதனுடைய ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆடவர், மகளிர் ஆகிய இருபால ரும் உடல் இன்பத்தில் உழன்றுகொண்டிருப்பார்கள், அப்படி உழலும் காலமெல்லாம் புலால் உடம்பில் பிணைக் கப்பட்டுள்ள புலைச்சேரி வாழ்வு அவர்கள் பெறும் பேறு ஆகும். இந்த மயக்கத்தினின்று மீண்டு மேலே வருபவர் கள் பாரமார்த்திகப் பெருவாழ்விற்குத் தகுதி உடைய வர்கள் ஆகின்றனர். அப்படித் தகுதி வாய்ந்தவர்கள் அறிவிலே ஊறியிருக்கின்றனர். பொருள்களை உள்ளது உள்ளபடி காண்பது அறிவு. பொறையிலே அவர்கள் நல்ல பயிற்சி பெறுகின்றனர். ஆசை என்னும் புயல் காற்று அடிக்கின்றபொழுது அதனால் அசைக்கப்படாது உறுதியாக நெறியில் நிலைநிற்பது பொறையாகின்றது. நின் அடியார் கூட்டத்திலே என்று அண்ணல் சத் சங்கத் தைச் சிலாகித்துச் சொல்கின்றார். நல்லார் இணக் கத்திற்கு நிகரான பாதுகாப்பு ஆத்ம சாதகனுக்கு வேறு ஏதுமில்லை. இரண்டு தராசுத் தட்டுகளுள் பளு அதிகம்

வாய்க்கப்பெற்றது கீழ் நோக்கிப் போகிறது. அங்ஙனம் தெய்வப் பற்று ஓங்கியிருப்பவர்களை உலகப் பற்று என்னும் சிறுமை வந்து அசைக்காது. இக் கோட்பாட்டை நிலைபெற்ற அன்பிலே என்று அண்ணல் இயம்புகின்ருர். ஒரு பொருள் வேறு ஒரு பொருளாகக் காட்சி கொடுப்பது மலைவு அல்லது மயக்கத்தின் விளைவு. அத்தகைய மயக்கத்தினின்று தெளிந்தவர்கள் தெய்வக் காட்சியையே யாண்டும் காண்கின்றனர். தெய்வக்காட்சியானது தெய்வத்துக்குரிய ஜீவாத்மாக்களைப் பரத்தின்கண்ணே கவர்ந்திழுக்கிறது. ஊசியைக் காந்தம் கவர்ந்திழுப்பதற்கு நிகர் அது. இக்கோட்பாட்டை மலைவு அற்ற மெய்ஞ்ஞான ஞேயத்திலே என்று அடிகளார் சிலாகித்துச் சொல்கிருர். வீடு பெற நில் என்பது ஜீவர்களுக்குரிய வாழ்க்கையின் குறிக்கோளாகிறது. ஜீவாத்மாக்கள் பரமாத்மாவின் திருவடிகளைச் சேர சதா முயன்றுகொண்டிருக்கிருர்கள். இந்த அரிய நோக்கத்தை உன் இருதாள் மட்டிலே என்று அண்ணல் இயம்புகின்ருர். அதற்குமேல் அடைவதற்குப் பெரிய நிலை ஏதும் இல்லாததால் மட்டிலே என்னும் பதத்தைப் பிரயோகிக்கின்ருர். வாழ்க்கையின் மேலாம் குறிக்கோள் இனிது நிறைவேறுவதற்கு ஜீவப்பிரயத்தனமும் பரம்பொருளின் அருளும் ஒன்று சேரவேண்டும். தக்க தருணத்தில் அச் சேர்க்கை மாருது நிகழ்வதாகிறது. அந்த அரிய வாய்ப்பை மனது செல நினது அருளும் அருள்வையோ என விப்பிரர் விண்ணப்பிக்கின்ருர். பர்வதராஜனின் இரண்டு கண்மணிக்கு நிகரான பார்வதிதேவியே, ராமேசுவரத்தில் எழுந்தருளியுள்ள தாயே, உமாதேவியே, கிருபை செய்வாயாக.

## மலைவளர் காதலி - 3.

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டிஎன்
போதத்தின் நடுவாகி அடியீறும் இல்லாத
போதபூ ரணவெளிக்குள்

ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
எல்லாஞ்செய் வல்லசித்தாம்
இன்பவுரு வைத்தந்த அன்னையே நின்னையே
எளியேன் மறந்துய்வனே

வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்கும்உள் கண்இலார்க்கும்
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
விறுவா தம்புகலுவாய்

வாதநோ யாளர்க்கும் எட்டாத முக்கணுடை
மாமருந் துக்கமிர்தமே
வரைரா சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

இந்திரியங்களுக்கிடையில் நான் மனதாயிருக்கிறேன் என்று கிருஷ்ண பரமாத்மா தமது விபூதியைப் பற்றி விளக்குகிறார். மனதின் பாங்கு பொருளை உள்ளபடி யூகித்து அறிதலாம். யூகிக்கும் திறமை மனதுக்கு இல்லாது போகுமாகில் இது பெரும் குறை. மனம் பண்பாடு இல்லாத மனிதன் ஜடத்துக்கு நிகராகிறான். மனம் எதைச் சார்கிறதோ அதன் பாங்கை அது எடுத்துக் கொள்கிறது. அடுப்புக்கரியோடு அதை ஒப்பிடலாம். கன்னங்கரேலென்று அடுப்புக்கரி ஜடப்பொருளாயிருக்

கிறது. ஆனால் தீயோடு தொடர்பு கொள்ளுமானல் அது சுடர்விட்டு ஒளிர்கிறது. அதே விதத்தில் மனது பிரபஞ்சத்தைச் சாருங்கால் அது ஜடநிலை எய்துகிறது. ஆத்மசொரூபத்தைச் சாருங்கால் அதனிடத்து ஆத்மப் பிரகாசம் வருகிறது. அத்தகைய மனதே அம்பிகையின் மகிமையைக் கிரஹிக்க வல்லதாகிறது. வேதங்கள் நான்கு உள. அவை முறையே ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என இயம்பப் பெறுகின்றன. இயற்கையின் தெய்விகப் பாங்கை அவைகள் இனிது விளக்குகின்றன. இந்த நான்கு வேதங்கள் மிகப் பழையவைகள். எப்பொழுது அவைகள் உருவெடுத்தன என யாருமே அறுதியிட்டுக் கூற முடியாது. பின்பு அவைகளைத் தொடர்ந்து ஆகமங்கள் பல அமைந்துள்ளன. அவைகள் சைவ ஆகமம், வைஷ்ணவ ஆகமம், சாக்த ஆகமம் இப்படியெல்லாம் விரிவடைகின்றன. கடவுள் வழிபாட்டை இன்னின்ன முறைகளில் நடாத்தவேண்டும் என அவைகள் தெளிவுறுத்துகின்றன. எனவே ஆத்ம சாதனங்கள் புரிய விரும்புகிறவர்களுக்கு வேதங்களும் ஆகமங்களும் நன்கு பயன்படுகின்றன. அப்படியிருந்தும் அவைகளைச் சரியாக அறிந்துகொள்ளுதற்கான அகக்கண் இல்லாதவர்கள் பலர் இருக்கின்றனர். ஒலிபெருக்கி ஓலமிடுகிறது. ஆனல் உட்பொருளை அது அறியவல்லதன்று. ஒலிபெருக்கிக்கு நிகராக வேதம் ஓதுகிறவர்களும் ஆகமப் பிரமாணம் கூறுகிறவர்களும் பலர் உளர். ஆயினும் அம்மேலாம் நூல்களின் சாரத்தை அன்னவர்கள் அறியமாட்டார்கள். அகக்கண் இருந்தும் அகக்கண் இல்லாத அந்தகர்கள் போன்றவர்கள் அவர்கள். நல்லவைகளும் கெட்டவைகளுமாகிய ஏதேதோ செய்திகள் காதில் வந்து வீழ்ந்து

கொண்டிருக்கின்றன. கண்ணை மூடுவது போன்று காதை மூட முடியாது. மூட முடிந்தால் அது பெரிதும் பிரதி கூலமாகப் போகும். வீட்டுக்குள் தூங்குகிறவனை வெளியில் இருந்து ஓலமிட்டு எழுப்ப முடியாது. இதுபோன்ற இடையூறுகள் பல உள. அவைகளைத் தவிர்த்தல்பொருட்டு காது யாண்டும் திறந்தபடி இருப்பது முற்றிலும் அவசியம். ஆனால் திறந்த காதுகளை வைத்துக்கொண்டு சிலர் பொருந்தாத செய்திகளைப் பிரியத்துடன் கேட்கின்றனர். பொருந்திய மேலாம் செய்திகளிடத்துப் பராமுகமாக இருந்துவிடுகின்றனர். அப்படி இருப்பது முறையன்று. அம்பிகையைப் பற்றிய மகிமைகளை ஆர்வத்துடன் கேட்க விரும்புகிறவர்களே காது படைத்தவர்களாகிறார்கள். அதில் ஊக்கம் படையாதவர்கள் செவிடர்களுக்கு ஒப்பானவர்கள். பொருந்தாத சொற்கள் காதில் பட்டாலும் கருத்தில் வாங்காதிருந்து பழகவேண்டும். பொருந்திய பொருள் புதைந்த சொற்களை ஆர்வத்துடன் கேட்டு அவைகளை ஆழ்ந்து சிந்தனை செய்யவேண்டும். அப்படிச் செய்கின்றவர்களுக்கே செவிகள் தெய்விகம் வாய்க்கப்பெற்றவைகள் ஆகின்றன. பின்பு கேள்வியில் முயலுகின்றபொழுது அம்பிகையின் அருள் செல்வம் ஓங்கி அவர்களிடத்தில் வளர்கிறது. பேசுதற்காக வாயும், அதில் நாவும் அமைந்திருக்கின்றன. பேசும் திறமை மனிதனுக்கு அமைந்திருப்பது பாராட்டத்தக்கது. பேச்சின் மூலம் ஆத்ம சாதனத்தை வளர்க்கலாம். பேச்சின் மூலம் தன்னுடைய பேச்சுத் திறமையை நிலைநாட்டுதற்கும், தான் பேச்சாளன் என்னும் செருக்கைப் பெருக்குதற்கும் அதைப் பயன்படுத்தலாம். இங்ஙனம் கண், காது, வாய் ஆகிய கரணங்களைப் பக்தியைப் பெருக்கு

தற்குப் பயன்படுத்தலாம் அல்லது பொருளற்ற பிரபஞ்ச வாழ்விலேயே பிறவிப் பெருங்கடல் பெருக்குதற்கும் பயன்படுத்தலாம். நல்ல ஆத்ம சாதகர்கள் இக்கருவி கரணங்களை அம்பிகையின் வழிபாட்டுக்கென்றே பயன் படுத்துவார்களாகில் அவர்கள் பாக்கியவான்கள். மானுட ஜன்மத்தை அவர்கள் நல்வழியில் பயன்படுத்துகிறார்கள். அன்னை பராசக்தி பிரபஞ்ச சொரூபமாகவும் அதற்கு அப்பாலிருக்கின்ற பரவஸ்துவாகவும் இலங்குகின்றாள் என்னும் கோட்பாட்டை முக்கண் உடை மாமருந்துக் கமிர்தமே என்னும் சொல்லடுக்கு விளக்குகிறது. பிரபஞ்ச வாழ்வு எனும் நோயில் வருந்தாதிருப்பதற்குத் துணையா யிருப்பதால் அவள் மாமருந்து ஆகிறாள். பரசொரூபமாக இருப்பதால் அவள் அமிர்தம் எனப் போற்றப்படுகிறாள்.

ஹிமவான் வரைராஜன் எனப்போற்றப் பெறுகிறான். அத்தகைய பெருமகனுக்கு இரண்டு கண்மணிகளாக அவனுடைய செல்வி உமாதேவி இலங்குகின்றாள். அன்னவளுடைய அனுக்ரஹம் வாய்க்குமானால் அதன் விளைவாக வரும் பாரமார்த்திகப் பெரும்பேறு இதுவாம்.

ஐம்பூதங்கள் மயமாகப் பிரபஞ்சம் இருக்கிறது. அத்தகைய பிரபஞ்சத்தின் இயக்கம் நாதம் அல்லது ஓசையாக வடிவெடுக்கிறது. உலகும் அது உண்டுபண்ணு கிற ஓசையும் தோன்றி இருந்து ஒடுங்குவதால் அவை பொய்யெனப் பகரப்படுகின்றன. எது ஒரு காலத்தி லிருந்து மற்றொரு காலத்தில் இல்லாது மறைந்துபட்டுப் போகிறதோ அது மெய்ப்பொருள் ஆகாது. அது பொய் யெனப் புறக்கணிக்கப்படுகிறது. உலகினுடைய தோற் றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் சாட்சியாக ஜீவாத்மா இருப் பதால் ஜீவாத்மாவாகிய நான் நிலைபேறு உடையவனுக்

இருக்கிறேன். அத்தகைய என்னிடத்துப் பொருள்களின் போக்கையும் வரவையும் காண்கின்ற தகைமை எனக்குண்டு. ஆதலால் என்னிடத்தில் போதம் அல்லது காணும் திறன் இருக்கிறது. ஆயினும் என்னிடத்துள்ள காணும் தன்மைக்கு வரையறை உண்டு. சூரியப் பிரகாசம் முகம் பார்க்கும் கண்ணுடியில் உள்ளபடி ஒளிர்கிறது. அப்படி ஒளிர்வதுபிரதிபிம்பிக்கும்சூரியனுகிறது. அதற்கு ஆதி அந்தம் உண்டு. அதற்கு நிகராயுள்ள ஜீவபோதம் அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்துக்கொண்டிருப்பதால் ஜீவபோதத்துக்கும் துவக்கமும் முடிவும் உண்டு. அந்தக் கரணத்தோடு இணைக்கப்பெருத மூலபோதமே மெய்ப் பொருள். பூரணம் என்று பகரப்பெறுவதும் அதுவே. அது எல்லேகாணுத பரவெளியாகும். ஆகவே அறிவுப் பரவெளியே ஜீவாத்மனுடைய நிறைநிலே. பிரபஞ்சத்தின் கூறுகளனைத்தையும் ஒதுக்கித் தள்ளிவிட்டுச் சிதாகாசமாகிய மூலநிலேயில் உறுதிபெற்று நிற்பதே வீடு பேருகும். அந்த நிஜநிலேயின் தோற்றங்களாகவே ஜீவ போதமும் ஜடப்பொருள்களும் வந்துள்ளனவாம். மூலப் பொருளேயும் அதனிடத்திருந்து வருவிக்கப்பட்டுள்ள பிரபஞ்சப் பொருள்களேயும் தோற்றுவிக்க வல்ல தாயே, உன்னே நான் புறக்கணித்து உய்வடைவது எங்ஙனம்? யாண்டும் இருந்தபடி இருப்பவள் நீயே. உன்னே நீயே உள்ளபடி உணர்கின்ருய். ஆதலால் நீ சித்சொரூபம். உன்னில் நீ திருப்தியடைந்தவளாயிருக்கின்ருய். ஆதலால் நீ ஆனந்த சொரூபம். சத்சித் ஆனந்த சொரூபமாகிய உன்னேச் சார்ந்திருப்பதே எனக்கு உய்வு ஆகும். தாயே, இப்பெருநிலேயில் என்னே யாண்டும் வைத்திருப்பாயாக என்பது இப்பாடலின் கருத்தாம்.

---

## மலைவளர் காதலி - 4.

மிடியிட்ட வாழ்க்கையால் உப்பிட்ட கலமெனவும்
மெய்யெலாம் உள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுறவேதனும்
துடியிட்ட வெவ்வினையை ஏவினுன் பாவிநான்
தொடரிட்ட தொழில்களெல்லாந்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
தொண்டர்பணி செய்வதென்ருே
அடியிட்ட செந்தமிழின் அருமையிட் டாருரில்
அரிவையோர் பரவைவாயில்
அம்மட்டும் அடியிட்டு நடைநடந் தருளடிகள்
அடியிது முடியிதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவையரசே
வரைராசனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

மொழி ஒன்றனுள் நுண்ணிய கருத்துக்களை வெளிப் படுத்துதற்கான பண்பு எவ்வளவுக்கெவ்வளவு மேன்மை யுற்றிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அந்த மொழி சீர்மை அடையப்பெற்றதாகும். தமிழுக்கு அந்த மகிமை இருப்பதால் அடியிட்ட செந்தமிழ் என அதை அண்ணல் பாராட்டுகிருர். செம்மையாக இம்மொழி அமைக்கப் பெற்றிருப்பதால் அது செந்தமிழ் என இயம்பப் பெறு கிறது. கருத்துக்களைத் தெளிவுபடுத்த இம்மொழிக்குத் தகைமையிருப்பதால் அதை அடியிட்ட மொழி என இயம்புகிருர். அத்தகைய மொழியின் அருமையிட்டு

அதாவது அருமையைக் கருத்தில் வைத்துக்கொண்டு சிவனார் குற்றேவல்புரியச் சென்றார். எங்குச் சென்றார் என்னும் கேள்வி எழுகிறது. ஆரூரில் அரிவை ஓர் பரவை வாயில் அம்மட்டும் — திருவாரூரிலே சுந்தர மூர்த்தி நாயனார்க்கு அருள்துறையில் வாழ்க்கைத் துணை யாக வாய்த்திருந்த பெண்பாலின் பெயர் பரவை. அவள் இளம் வயதில் இருந்ததனால் அரிவை என இயம்பப்படு கிறாள். பரவைக்கும், சுந்தரமூர்த்தி நாயனார்க்கும் இடை யில் ஏற்பட்டிருந்த தெய்விக இணக்கத்திற்குப் பணி விடை பண்ணப் பரமன் முன்வந்தார். அவருடைய வர வுக்கு மேலும் தூண்டுதல் போட்டது சுந்தரமூர்த்தி நாயனார் செந்தமிழில் பாடியருளிய தேவாரமாகும். அப் பரமனே அகண்ட வஸ்து. ஆதலால் அவருடைய அடி யையும் முடியையும் சென்றடையக் கிருத்திய கர்த்தாக் களாகிய ஹரிக்கும் அயனுக்கும் இயலவில்லை. அகண் டப்பொருளை எல்லையிலடங்கிய மூர்த்தி யாருமே எட்ட முடியாது என்பது தத்துவம். மொழியிலடங்காத முழு முதற் பொருளை மொழிமயமாயிருக்கின்ற வேதநாயகி எட்ட முயலுகிறாள். அத்தகைய பராசக்திக்கு அது ஓரளவு சாத்தியமாகிறது. முழுதும் சாத்தியப்படுவ தில்லை என்னும் கோட்பாட்டைப் "பரவை வாயில் அம் மட்டும் அடியிட்டு நடை நடந்து அருள்கின்ற அடிகளின் அடி ஈது முடிஈதுஎன வடியிட்ட"—வடித்தெடுத்த செம் மையான சொற்களைப் பயன்படுத்தும் மறைநாயகி என அம்பிகை போற்றப் பெறுகிறாள். அவள் திரிலோக சுந் தரி. இக்கோட்பாட்டை விளக்குதற்கு அண்ணல் பச்சை இளம் கிள்ளையே எனப் பாராட்டுகிறார். கிளிக்கு அமைந் துள்ள மற்றொரு பெயர் கிள்ளை. கட்டிலடங்காத பரம்

பொருள் தெள்ளி எடுத்த மொழிக்குச் செவி சாய்க்கிறார் என்னும் கோட்பாடு இப்பாட்டில் அடங்கியிருக்கிறது. மேலும் போக்கும் வரவும் புணர்வும் இலாத பெரிய பொருள் பக்திக்கு இணங்கி ஒரு பக்திமதியின் இல்லம் வரையில் நடந்து சென்றார் என்னும் கோட்பாடு பக்தியின் மகிமைக்கு நல்ல விளக்கமாகிறது. அன்னை பராசக்தி மேலும் வளமருவு தேவையரசே எனப் பாராட்டப் பெறுகிறாள். தேவைஎன்பது ராமேஸ்வரத்துக்கு அமைந்துள்ள மற்றொரு பெயராகும். தெய்விகப் பெருமைகள் யாவும் செறிந்துள்ள ராமேஸ்வர க்ஷேத்திரத்தின்கண் எழுந்தருளியிருக்கும் அண்ட நாயகியே என்பது இந்தச் சொல்தொடரின் உட்கருத்தாகும். வரைராஜன் என்னும் சொல் ஹிமவானைக் குறிக்கிறது. தம் தந்தையாகிய ஹிமவானுக்கு அவள் இரண்டு கண்களாகத் திகழ்வது அவளுடைய ஆத்மீகச் சைதன்யத்துக்கு எடுத்துக்காட்டு ஆகும். இரு கண்மணியாய் உதித்தவள் என்னும் சொல் அதை விளக்குகிறது. அன்போடு தந்தையினால் பேணப்பெற்றதனால் அவள் மலைவளர் காதலி என விளக்கப் பெறுகிறாள். உமையே என்னும் சொல் உமாதேவி என விரிவடைகிறது. உமா என்னும் பதம் சக்திக்குரிய பிரணவம் எனப் போற்றப் பெறுகிறது. ஏனென்றால் அகர உகர மகரமாகிய மூன்றெழுத்துக்களும் அந்த நாமத்தில் இடம்பெறுகின்றன. இத்தனைவித மகிமைகளும் வாய்க்கப்பெற்றுள்ள அன்னையே, என் குறைபாட்டை உன்னிடம் சமர்ப்பிக்கின்றேன். அதற்குச் சிறிது செவிசாய்ப்பாயாக என்னும் கருத்து இப்பாட்டில் தொக்கியிருக்கிறது. மிடியிட்ட வாழ்க்கையில் நான் உழல்கிறேன் என்பது வறுமை நோயில் வருந்திக்கொண்

டிருப்பது எனப் பொருள்படுகிறது. அருளுக்குப் பாத்திரமாகாதவர்கள் வேறு எந்தப் பேறு அதனை எவ்வளவு தான் பெற்றிருந்தாலும் அவர்கள் வறியர்களே. அருளுக்குப் புறம்பாகிய நான் அத்தகைய வறுமையில் வாடுகிறேன். உப்புப் போட்டு வைக்கப்பட்டிருக்கின்ற மட்பாண்டம் நல்லநிலையிலிருப்பது போன்று வெளிக்குத் தென்படுகிறது. ஆயினும் அதன் உட்பகுதி உப்பின் உவர்ப்பினுல் அரிப்பு உண்டு க்ஷீணதசையடைகிறது. அதற்கு நிகராக என் உடல் வெளிப்பார்வைக்கு ஆரோக்கியமாக இருப்பது போலத் தென்படுகின்றது. ஆனுல் உடலினுள்ளே என்னென்ன நோய்கள் புகுந்து என்னென்ன பாங்குகளில் அதை வாட்டி வருகின்றன என்பதைப் பிணியாளனுகிய நான் அறிகிலேன். இக்கோட்பாட்டை மிடியிட்ட வாழ்க்கையால் உப்பு இட்ட கலம் எனவும் மெய்எல்லாம் உள் உடைந்து எனவும் அண்ணல் இயம்புகின்ருர். நோய்வாய்ப்பட்டிருக்கும் ஒருவன் திதிக்ஷை அல்லது பொறுமை பழகுதல் வேண்டும். அதற்காகத்தான் ஆத்ம சாதனத்துக்கு உற்ற உபாயமாக நோய் வந்து அமைகிறது. அந்தப் பாங்கில் நோயை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. நோயை அகற்றுதற்கு ஏற்ற உபாயமாய்ச் செல்வத்தை நாடிப் பணக்காரர்கள் இடத்தின்கண் சென்று அங்கு நான் வீண் காலம் போக்கிக் கொண்டிருக்கின்றேன். இக்கோட்பாட்டை வீறு இட்ட செல்வர் தம் தலைவாயில் வாசமாய் என்று அண்ணல் இயம்புகின்ருர். வீறு இட்ட என்னும் சொல் ஏராளமாக எனப் பொருள்படுகிறது. பஞ்சபூதங்களாலாகிய உடல் பிராரப்த கர்மத்தின் விளைவாக ஏதேனும் ஒரு விதத்தில் இடையிடையே நோய்வாய்ப்படும். காரண

காரியமாக நோய்வந்து வாய்ப்பது இயல்பு. இக்கோட்பாட்டை "வேதனைகள் உற வேதனும் துடியிட்ட வெவ்வினையை ஏவினன்" என்று விளக்குகிறார். வெவ்வியவினை அல்லது கொடியவினை துன்பத்தை விளைவிக்கின்றது. துடியிட்ட என்னும் சொல் அப்பதைபதைப்பை எடுத்துக்காட்டுகிறது. பெறுதற்கரிய மானுடப் பிறவியைப் பெற்றிருப்பவன் அதை ஒரு பெரிய காரியத்துக்காகப் பயன்படுத்துதல் பொருட்டேயாம். உடலைப் பேணுதற் பொருட்டுப் பிறவி எடுத்திருப்பது சிற்றுயிர்களின் பாங்கு ஆகும். அந்த அல்பச் செயலில் மேன்மை தங்கிய மனிதனும் ஈடுபடுவானாகில் அவன் முற்றிலும் அனுதாபத்திற்குரியவனாகிறான். இப்பரிதாபகரமான நிலையை 'பாவி நான் தொட்டிட்ட தொழில்களெல்லாம் துண்டு இட்ட சாண்கும்பியின் பொருட்டாயது' என்று வருந்துகின்றார் அண்ணல். சாண்கும்பி என்பது ஒரு சாண் நீளமுள்ள வயிற்றைக் குறிக்கிறது. அது வயிற்றினுள் ஓர் அளவுக்கு உட்பட்டிருப்பதால் துண்டு இட்ட என அதன் அளவை இயம்பப்படுகிறது. மானுட ஜன்மத்தின் மேலான செயல்களுள் ஒன்று இறைவனுடைய பக்தர்களுக்குப் பணிவிடை பண்ணுதலாம். பக்தர்களுக்குப் பண்ணுகிற பணிவிடையும், பகவானுக்குப் பண்ணுகிற பணிவிடையும் ஒன்றேயாம். அந்த வாய்ப்புத் தமக்கு அமையாதிருப்பதைக் குறித்து 'உன் தொண்டர்பணி செய்வதென்றோ' என்று அண்ணல் ஏங்குகின்றார். அன்னையின் அருளால் வாய்க்கப்பெற்ற மானுட வாழ்வு அனர்த்தமாய்ப் போகலாகாது. இறைவன் பணிவிடையிலும் பக்தர்கள் பணிவிடையிலும் அது நன்கு பயன்படவேண்டும் என்பதே இப்பாட்டின் உட்கருத்தாம்.

---

## மலைவளர் காதலி - 5.




பூரணி புராதனி சுமங்கலை சுந்தரி
புராந்தகி த்ரியம்பகிஎழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள
புட்பமிசை வீற்றிருக்கும்

நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்திஎன்றுன்
நாமமே உச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்கவசமோ

ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடிஈன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே

வாரணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவைஅரசே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

உயிரும் உடலும் ஒன்று. சிவனும் சக்தியும் இணை பிரியாதவர்கள். அர்த்தநாரீஸ்வரன் என்று சிவனார் போற்றப்படுகிறார். மாது ஒரு பாகம் ஆனவன் என்பது அதன் பொருள். ஆரணி சடைக்கடவுள் என இறைவன் இயம்பப்பெறுகிறார். ஆத்திமாலையை ஜடாபாரத்திலே அணிந்திருக்கும் பெரிய பொருள் என்பது இதன் விளக்கம். அன்னவரோடு இணைபிரியாதிருப்பவள் ஆரணி என இயம்பப்பெறுகிறாள். ஒரே சொல்லாகிய ஆரணி கடவுளுக்கு வருகின்றபொழுது ஆர் அணி எனப் பிரிக்கப்படு

கிறது. அதே சொல் பிரிவு படாத நிலையில் அம்பிகைக்கு விளக்கமாகிறது. வேத நாயகி என்பது இதன் பொருள். ஆர் அணி கடவுளும் ஆரணியாகிய அம்பிகையும் பக்தர்களால் போற்றுதற்குரிய மூர்த்திகளாக அமைந்திருக்கின்றனர். இக்கோட்பாட்டை எனப் புகழ என்னும் சொல் தொடர் விளக்குகிறது. அண்ட நாயகியாகிய அம்பிகை அனந்தங்கோடி அண்டங்களையும் புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள அனந்தங்கோடி ஜீவாத்மாக்களையும் சர்வகாலமும் தோற்றுவித்துக் கொண்டே இருக்கிறாள். ஜகத் ஜனனியாகிய அவள் காலமெல்லாம் சேதன அசேதனங்களைப் பெற்றெடுத்துக் கொண்டேயிருப்பதனால் சலிப்படைவதில்லை. அகண்டாகாரத்தில் ஓடும் காலம் அவளிடத்து எந்த விதமான விகாரத்தையோ, தேய்வையோ, அழிவையோ உண்டுபண்ணுவதில்லை. அம்பிகையினிடத்துள்ள இந்த மகிமை அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும் என்னும் பாட்டமைப்புப் பொருளுக்கேற்ற பத அமைப்புடன் பொலிகிறது. காலமெல்லாம் அவள் அனைத்துக்கும் அன்னையாகவும் அதேவேளையில் கன்னியாகவும் திகழ்ந்து கொண்டிருப்பதற்குப் பிரபஞ்சத்தின் அமைப்பே சான்று ஆகிறது. மறை என்பது வேதம். அது பிரபஞ்சத்துக்கும் பொருந்துகிறது; தீர்க்கதரிசிகள் எழுதிய நான்கு வேதங்களுக்கும் பொருந்துகிறது. தங்கத்தினாலாகிய நகைகளனைத்தும் தங்கமயமாகத் திகழ்கின்றன. ஆனந்த சொரூபிணியாகிய அம்பிகையினிடத்திருந்து உயிர்கள் அனைத்தும் வந்திருப்பதால் இந்த உயிர்கள் யாவும் யாண்டும் ஆனந்தத்திலேயே திளைத்திருக்கின்றன. பறவைகளுள் அழகில் உச்சநிலையை எட்டியிருப்பது

மயில். திரிபுர சுந்தரியாகிய அம்பிகையை மயிலே என விளிப்பது முற்றிலும் பொருந்தும். ஆனந்த ரூபமயிலே என்று அம்பிகையை அண்ணல் அழைப்பது அவருடைய அனுபூதிக்கும் எடுத்துக்காட்டு ஆகிறது. எட்ட இருந்து பார்க்கிறபொழுது ஆண்பாலர் வேறு பெண்பாலர் வேறு என்பதை மார்பிலுள்ள ஸ்தனபாரங்கள் விளக்கிக் காட்டு கின்றன. பழங்காலத்து ஐதிகப்படி பெண்பாலர் தங்களு டைய கொங்கைகளுக்குக் கச்சை கட்டிக் கொண்டிருந் தனர். பொதுப்படப் பெண்பாலர்களிடத்துக் குறைநிலே ஒன்று உண்டு. அதாவது ஒரு பெண்பாலே மற்ருெரு பெண்பால் சிலாகித்துப் பேசமாட்டாள். மற்றவளி டத்து இருக்கும் குறைநிலேயே ஒருத்தி கண்ணில் படும். அந்த விதிக்கு விலக்காக மாதர்கள் அனேவரும் அன்னே பராசக்தியைக் கண்டு மகிழ்ந்துகொண்டும் அவளேப் பற்றிக் கூறி மகிழ்ந்துகொண்டும் இருக்கின்றனர். இவ் வுண்மையை அண்ணல் வார் அணியும் இருகொங்கை மாதர் மகிழ் என்னும் அடித்தொடரில் அற்புதமாக விளக்குகின்ருர். கற்பனேயின் விளேவாகச் சிவனுருக்கு மனேவிமார் இருவர் என இயம்புவர். இருவருள் ஒருத்தி இறைவனுடைய செம்பாதியாக வடிவெடுத்து இருக்கின் ருள். அவள் உமை. மற்ருெருத்தி ஜடாபாரத்திலிருந்து கொண்டு அருளேப் பொழிந்து கொண்டிருக்கின்ருள். அவள் கங்காதேவி. கங்காதேவியும், உமாதேவியும் சகதர்மிணிகள் ஆகின்றனர். சகதர்மிணிகளேச் சக்களத்தி கள் என்று சொல்லுவது மரபு. சக்களத்திகள் உலக நடைமுறையில் சண்டைக்குப் பேர் பெற்றவர்கள். ஆனுல் சிவனுர் குடும்பம் உலகப் போக்குக்கு விலக்காக அமைந்திருக்கின்றது. கங்காதேவி சர்வகாலமும் உமா

தேவியைப் புகழ்ந்து போற்றிக்கொண்டே இருக்கின்ருள். அத்தகைய உமாதேவி தெய்விகப் பொலிவு பெற்ற ராமேசுவர க்ஷேத்திரத்தில் சான்னித்தியமாயிருக்கின் ருள். இக்கோட்பாட்டைக் கங்கை புகழ் வளமருவு தேவை அரசே என அடிகளார் போற்றுகிருர். ஹிமவாளுகிய வரைராஜனுடைய இரண்டு கண்மணிகளுக்கு நிகர் அவருக்குப் புதல்வியாகத் தோன்றிய உமாதேவி. இக் கருத்தை வரை ராஜனுக்கிரு கண்மணியாய் உதித்த மலேவளர் காதலிப்பெண் உமையே என அடிகளார் கூறுகின்ருர். மலேவளர் காதலி என்னும் சொற்ருெடர் மலேயரசஞகிய ஹிமவான் பெற்றெடுத்து அன்புடன் வளர்த்து வரும் செல்வி எனப் பொருள்படு கிறது.

தாயே, நீ முழுமுதற்பொருள். உனக்குப் புறம்பாக ஒன்றுமில்லே. சராசரங்கள் யாவும், சேதன அசேதனங் கள் யாவும் உன்னிடத்து அடங்கப்பெற்றவைகளாக இருக்கின்றன. ஆதலால் நீ பூரணி என்று பொருத்த மான பதத்தைக்கொண்டு போற்றப்படுபவள் ஆகின் ருய். நீ காலத்தையெல்லாம் கடந்தவள். ஆதலால் உனக்குத் தோற்றம் என்பது கிடையாது. தோற்றத் துக்கு வந்தவைகளுள் பழம்பொருள்கள் பல இருக்கின் றன. அப்பழம் பொருள்களுக்கெல்லாம் முன்னேப் பழம் பொருளாக நீ பொலிகின்ருய் ஆதலால் உன்னேப் புரா தனி எனப் போற்றுவது பொருந்தும். நீ சிவனுருடைய சொரூபத்தில் செம்பாதி இடம்பெற்றவளாக இருக்கின் ருய். உன்னே முன்னிட்டே சிவனுருக்கு அர்த்தநாரீசு வரன் என்னும் பெயர் வந்துள்ளது. மாது ஒரு பாகம் ஆனவன் என்பது அதன் பொருள். சிவமும், சக்தியும்

சொரூபத்தில் ஒன்று. செயலற்ற பகுதி சிவம் என்றும் செயல் உற்ற பகுதி சக்தி என்றும் அழைக்கப் பெறுகிறீர்கள். உங்களுடைய பேரிணக்கத்தால் பிரபஞ்சம் என்னும் திரிலோக குடும்பம் இனிது நடைபெற்று வருகிறது. உன் கணவன் சிவனார் காலகாலன் என அழைக்கப்படுகிறார். அதாவது காலத்தையும் எடுத்து விழுங்கும் மரணமிலாப் பெரும்பொருளாக அவர் அமைந்துள்ளார். பெண்பால் ஒருத்தி கணவனோடு சேர்ந்து வாழ்கிற பொழுது சதவா என்றும் சுமங்கலி என்றும் அழைக்கப் பெறுகின்றாள். கணவனை இழந்த மாது ஒருத்தி விதவா என்றும் அமங்கலை என்றும் கூறப்பெறுகிறாள். நீயும் உன் தலைவனும் நித்தியப் பொருள்கள். ஆதலால் நீ சர்வகாலமும் சுமங்கலியாகவே சீருடன் இருந்து வருகிறாய். கணவனுடைய ஆதிக்கத்தில் அடங்கியிருப்பது பெண்பால் ஒருத்திக்குப் பெருமையாகிறது. பெண்டிற்கழகு எதிர் பேசாதிருத்தல் என்பது கோட்பாடு. சரீரத்தில் இருவர் எனினும் கருத்தில் கணவனும் மனைவியும் ஒன்றுபட்டிருத்தல் வேண்டும். தனி ஆதிக்கமோ அபிப்பிராயமோ மனைவியொருத்திக்கு இருக்கலாகாது. இது உலகநடைமுறை. ஆனால் நீயும் உன் தலைவனும் சரீரத்திலும் ஒன்று; சிந்தையிலும் ஒன்று. நிர்வாகம் முழுவதையும் வல்லமை வாய்ந்த உன்னிடத்தே உன் தலைவன் ஒப்படைத்திருக்கிறார். அவர் சாட்சி மாத்திரமாக வீற்றிருக்கிறார். இச்சா சுதந்திரம் முழுவதும் உனக்கே சொந்தம். ஆதலால் நீ பரந்த்ரி அல்லள், சுவதந்த்ரியாக வீற்றிருக்கின்றாய். உலக நடைமுறையில் அகத்திலுள்ள அலுவல்களை மனைவி கவனிக்கின்றாள். புறத்திலுள்ள அலுவல்களைக் கணவன் கவனிக்கின்றான்.

ஆனால் தாயே, கௌரீ சங்கரனாகிய உங்கள் இருவருடைய போக்கு அலாதியானது. திரிபுர சம்ஹாரம் செய்தது சிவனாருடைய அற்புதச் செயல் என்பது ஐதிகம். மூன்று அரக்கர்களுடைய ஆதிக்கம் விண்ணவர்களுக்கும் மண்ணவர்களுக்கும் உபத்திரவமாக இருந்தது. சிவனாரிடம் அவர்கள் முறையிட்டார்கள். தக்க ஏற்பாட்டுடன் சென்று சிவனார் திரிபுர சம்ஹாரம் செய்தார். ஆதலால் அவருக்குப் புராந்தகன் என்னும் பெயர் வந்துள்ளது. அதே பெயர் புராந்தகி என்று தாயே, உனக்கும் வந்துள்ளது. ஏனென்றால் கிருத்தியங்களனைத்துக்கும் நாயகியாக இருப்பவள் நீ. சிவனாருடைய சன்னிதான விசேஷத்தால் செயல்களனைத்தையும் நீயே செய்து சாதிக்கின்றாய். திரிபுர சம்ஹாரமும் உன் சக்தியைக்கொண்டு நிகழ்ந்தது. ஆதலால் உன்னைப் புராந்தகி எனப் போற்றுவது முற்றிலும் பொருந்தும். கண்மேல் ஒரு கண்ணுடையான் சிவனார். ஜீவகோடிகள் படைத்துள்ள ஊனக்கண்களிரண்டும் உலகைக் காண்பதற்கு உதவுகின்றன. நெற்றியிலிருக்கும் ஞானக்கண்ணே பிரபஞ்சாதீதத்திலிருக்கும் பரத்தைத் தரிசிக்க உதவுகிறது. இங்ஙனம் சிவனார் முக்கண்ணனாயிருப்பதால் அவருக்குத் த்ரயம்பகன் என்ற பெயர் வந்தது. அத்தகைய மகிமையால் சிவனாருக்குச் சக்தியாகிய நீ எந்த விதத்திலும் பின் தங்கியவள் அல்லள். ஆதலால் உன் தலைவன் த்ரயம்பகனாயிருப்பது போன்று அவரோடு சம அந்தஸ்து பெறுகிற நீ த்ரயம்பகி எனப் போற்றப் பெறுகின்றாய். விபூதிகளனைத்தும் பரவஸ்துவுக்கே உரியவைகளாகின்றன. அந்தப் பரவஸ்துவே பிரபஞ்சமாக இலங்கிக்கொண்டிருக்கிறது. பிரபஞ்சத்திலோ எங்குத் திரும்பிப்பார்த்தாலும் அது

எழில் வடிவெடுத்திருக்கிறது. அவை யாவும் படைத்துள்ள சகுணப்பிரம்மம் புங்கவன் எனப் போற்றப்படுகின்ருன். புங்கவன் என்னும் ஆண்பாலுக்கு நிகராயிருக்கும் பெண்பாலுக்குப் புங்கவி என்னும் பெயர் வந்துள்ளது. எழில் புங்கவி என்று உன்னைப் போற்றுவது பொருள் சேர்ந்த புகழாகிறது. சிவம் என்னும் சொல்லுக்குப் பொருள் மங்களம். எது நலனே வடிவெடுத்திருக்கிறதோ அது சிவம். எவன் நலனே செய்கின்ருனே அவன் சங்கரன். அன்னவன் செயல்களனைத்தையும் தாயே, நீயே செய்து வருவதால் உன்னை விளங்கு சிவ சங்கரி எனப் போற்றுகிருேம்.

மானுட சரீரத்தில் அமைந்துள்ள ஏழாவது ஞான பூமி உச்சந்தலையிலிருக்கிறது. அது சஹஸ்ராரம் என்னும் பெயர் பெறுகிறது. ஆயிரம் இதழ்களை உடைய தாமரைப் பூ என்பது அதன் பொருள். உண்மையில் எண்ணிக்கையில் அடங்காத அகண்டாகாரத்துக்கு இது சிறப்புப் பெயராக விளங்கி வருகிறது. மூலாதாரத்தில் கிளம்பி மேல்நோக்கி வருகிற குண்டலினி சக்தி சஹஸ்ராரத்தை எட்டுகிறபொழுது ஜீவவியக்தி பரவஸ்துவில் லயமாகிறது. ஏழாவது ஞான பூமியிலுள்ள பெரிய பொருளுக்கு நாரணி என்னும் பெயரை அண்ணல் வழங்குகின்ருர். நாராயணன் என்பவன் ஆண்பால் மூர்த்தி. நாராயணீ என்னும் பெண்பால் மூர்த்தியாக அம்பிகை அழைக்கப் பெறுகிருள். அவள் நாராயணனுடைய சகோதரி. இத்தகைய உலக இணக்கம் பொருள் ஒன்று அதற்குப் பெயர்கள் பல என்னும் சமரசத்தை நிலைநாட்டுதற்கு அமைந்துள்ளது. பண்பாடடைந்துள்ள ஜீவாத்மா பரத்தில் லயமாகிற அப்பெரிய நிலை

யைச் சஹஸ்ரதள புஷ்பமிசை வீற்றிருக்கும் நாரணீ என அம்பிகை ஸ்தானத்துக்கு முதன்மை கொடுத்து இயம்பப்படுகிறது. மனம் செயல்புரிகிற இடமெல்லாம் பிரகிருதி மயமாயிருக்கிறது. மனது தூயதாகத் திருந்தி அமைய அமைய பிரகிருதி தத்துவம் மகிமைகளோடு கூடிய புருஷதத்துவமாகக் காட்சி கொடுக்கிறது. மனம் ஒடுங்கியவிடத்துச் சொல்லில் அடங்காத பரவஸ்துவே எஞ்சி நிற்கிறது. அக்கோட்பாட்டை மனாதீத நாயகி (மன அதீத) – மனதைக் கடந்துள்ள இறைவி என அண்ணல் இயம்புகிறார். அந்த வஸ்து முக்குணங்களுக்கு அப்பாற்பட்டது. ஓசை, ஒலி ஒன்றும் அதை எட்டமாட்டாது. இக்கோட்பாட்டைக் குணாதீத (குண + அதீத) நாதாந்த (நாதம் + அந்தம்) சக்தி என அம்பிகை போற்றப் படுகிறாள். அம்பிகையின் சொரூபத்தில் லயமானவர்களுடைய நாமத்தை உச்சரிப்பதும் அம்பிகையினுடைய நாமத்தை உச்சரிப்பதற்கு நிகராகிறது. இதற்குத் தக்க சான்றாக அமைந்திருப்பவர் ராமகிருஷ்ண பரமஹம்சர். அம்பிகை உபாசனை பண்ணி அம்பிகை சொரூபத்தில் லயமானவர் அவர். ஆதலால் ஜபத்துக்கு அவருடைய நாமமும் அம்பிகையினுடைய நாமமும் ஒன்றேயாம். இக்கோட்பாட்டை 'என்று உன் நாமமே உச்சரித்திடும் அடியார் நாமமே நான் உச்சரிக்க வசமோ' எனத் தாயுமானவர் இயம்புகிறார்.

---

## மலைவளர் காதலி - 6.

பாகமோ பெறஉனைப் பாடஅறி யேன்மல
பரிபாகம் வரவும்மனதில்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப

தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரஎன் ருற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்

மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
முற்றுமாற் சரியமோதான்
முறியிட்டெனைக்கொள்ளும் நிதியமோதேடஎனின்
மூகவரி வண்டுபோல

மாகமோ டவும்வல்லன் எனையாள வல்லையோ
வளமருவு தேவைஅரசே
வரைரா சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

மானுடனொருவனுக்குத் தெய்விகப் பேராற்றல் ஏதேனும் வாய்க்குமானுல் அதைக் கடவுள் வழிபாட்டுக் கென்றே அவன் பயன்படுத்த வேண்டும். அத்தகைய பேராற்றல்களுள் பரம்பொருளைக் குறித்துப் பக்தி பூர்வமாகப் பொருள் செறிந்த கருத்தை இனிய சொற்களைக் கொண்டு பாடுவது நல்ல வழிபாடு ஆகும். அத்தகைய வாய்ப்புத் தமக்கு அமையவில்லையென்று தாயுமான சுவாமிகள் 'பாகமோ பெறவுனைப் பாட அறியேன்' என்ற சொற்றெடர் மூலம் தெரிவிக்கிருர். இதில் பாகம்

பெற என்னும் சொல் தொடரில் பொருள்சுவையும், சொற்சுவையும் பொதிந்திருக்கவேண்டும் என்னும் கருத்து அமைந்திருக்கிறது. ஜீவாத்மன் மும்மலங்களாகிய ஆணவம், கன்மம், மாயை ஆகியவைகளில் கட்டுண்டவனாக இருக்கிறான். இம்மலங்களை ஒதுக்குதல் பொருட்டே அவன் ஆத்ம சாதகன் ஆகிறான். அவனுக்கு இன்றியமையாத மனதானது சீர்மையே வடிவெடுத்திருத்தல் வேண்டும். அத்தகைய மனப்பாங்கு தமக்கு அமையவில்லை என்னும் கருத்தை 'மலபரிபாகம் வரவும் மனதில் பண்புமோ சற்றுமிலை' என்று அவர் முறையிடுகின்றார்.

அஷ்டாங்க யோகத்தின் எட்டு அங்கங்களுள் யமம், நியமம் ஆகிய இரண்டும் மிக முக்கியமானவைகள். வீடு கட்டுவதற்கு அஸ்திவாரம் எங்ஙனம் இன்றியமையாததாக இருக்கிறதோ அங்ஙனம் யமமும், நியமமும் ஆத்ம சாதனத்திற்கு முற்றிலும் அவசியமானவைகளாகின்றன. கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பொறிவழிச் செல்லாமை, பொருள் மிகப் படையாமை ஆகிய ஐந்தும் யமத்துக்குரியவைகளாகின்றன. பிறகு தூய்மை, ஆழ்ந்த மன இனிமை, நூல் ஆராய்ச்சி, தவம், ஆத்ம சமர்ப்பணம் ஆகிய ஐந்தும் கூடி நியமம் எனப்படுகின்றன. மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களையும் தூய்மையாக வைத்திருப்பது சௌசம். மனத்தில் வியாகுலம் தோன்றலாகாது; வரம்புகடந்து களி கொள்ளுதலும் பொருந்தாது. மனம் எப்பொழுதும் இனிமையோடு கூடிய உற்சாகமும், சாந்தமும் உடைத்திருக்கவேண்டும். அத்தகைய மனநிலைக்குச் சந்தோஷம் என்று பெயர். பாரமார்த்திக விஷயங்களைப் புகட்டும் நூல்களைச் சிரத்தையோடு கற்றறிவது சுவாத்யாயம் ஆகிறது.

மானுட வாழ்க்கையைப் பாரமார்த்திகப் பெருநெறிக் கென்றே பயன்படுத்துவது தபசு. ஈசுவர விசுவாசம் வைத்து ஈசுவரப் பிரீதிக்காக அவரிடம் ஆத்மசாதகன் ஒரு வன் தனது வாழ்வை ஒப்படைப்பது ஆத்ம சமர்ப்பணம். இவ்வைந்தும் ஒழுங்காக அமையப்பெற்றிருப்பவன் நிய மத்திலே நிலைத்திருப்பவனாகிறான். நல்லொழுக்கத் தில் நிலைபெற்றிருப்பதற்கு உடல் திட்பம் முற்றிலும் தேவையாகிறது. வலிவற்றவனே மனம் போனபோக்கில் எல்லாம் போய்ப் பாபம் புரிகிறான். அப்படி நெறி வழுவு வது ஆத்ம சாதகனுக்கு ஒவ்வாது. இக்கோட்பாட்டை 'நியமமோ செய்திடப் பாவியேன் பாபரூபதேகமோ திட மில்லை' என அவர் முறையிடுகின்றார். நூல்பல கற்கின் றவன் பண்டிதனாகலாம். ஆனால் அவனை ஞானி என லாகாது. கடவுள் ஒருவரே மெய்ப்பொருள் என யுக்தி பூர்வமாக அறிந்துகொள்கின்றவன் ஞான மார்க்கத்தில் பிரவேசிக்கின்றான். உலகம் முழுதையும் பரம்பொருள் சொரூபமாக அனுபூதியில் அறிந்துகொள்ளும் ஞானியா வதற்கு உரிய கோட்பாடுகளைக் கேள்வியளவிலாவது தெரிந்துகொள்கிறவர்கள் மிகச் சிலரே. கேட்டதைச் சிந் தித்துப் பார்ப்பவர்கள் அவர்களிலும் சிலரே. இத்தகைய அரியநிலையை 'ஞானமோ கனவிலும் சிந்தியேன்' என்று அண்ணல் விமரிசனம் பண்ணுகிறார்.

நெறியில் ஒழுங்காகச் செல்பவர்களே குறியைச் சென்றடைகின்றனர். நெறியில் நிலைநிற்பதற்கேற்ப இன்பம் பேரின்பமாக மாறுகிறது. உணவை ஏற்பதற் கேற்பப் பசி அடங்குகிறது. நன்னெறியில் நிலைத்திருப் பதற்கேற்பப் பேரின்பம் சுரக்கிறது. நன்னெறியில் நிலைநிற்கக் கபட மனது மறுதலிக்கிறது. இம்மேலாம்

கோட்பாட்டைப் 'பேரின்பமோ சேரவென்ருல் கள்ள மனதுமோ மெத்தவும் சிந்திக்குது, என் செய்குவேன் ?' என ஆரம்ப சாதகன் நிலையில் தம்மை வைத்துக் கொண்டு தாயுமானவர் இயம்புகின்ருர். ஏதேனும் ஒரு பொருளில் பொருத்தமற்ற பற்றுதல் வந்தால் அது மோகம் எனப்படுகிறது. மாரீச மானினிடத்துச் சீதைக்கு வந்த பற்றுதலை மோகம் எனலாம். ஆத்ம சாதனத் துக்கு அது உதவாது. தற்பெருமை மதம் எனப்படு கிறது. வெறி பிடித்துள்ள நிலையும் மதம் எனப்படு கிறது. மதம் பிடித்துள்ள யானைக்குப் பக்கத்தில் யாரும் போகக்கூடாது. அதே விதத்தில் தற்பெருமை பூண்டிருப்பவர்கள் தத்துவ ஆராய்ச்சிக்கு உதவமாட் டார்கள். அத்தகைய பொருந்தாத மனநிலை மதம் எனப்படுகிறது. குரோதம் என்ருல் சினம் அல்லது கோபம். வரம்புக்கு மீறி ஒருவன் சினத்துக்கு ஆளாவா ளுகில் அவ்வேளையில் அவன் பைத்தியக்காரன்போன்று நடந்துகொள்கிருன். ஆதலால் குரோதம் சன்மார்க்கத் துக்குச் சத்துருவாக வந்தமைகிறது. லோபம் என்பது தான் சம்பாதித்துள்ள சொத்தில் மிகைப்பட்ட பற்றுதல் வைப்பதாம். ஆத்மசாதகன் தான் பெறுவதையெல் லாம் மற்றவர்களோடு பங்கிட்டுக்கொள்வதால் அவ னுடைய சுயநலம் தேய்கிறது. அகப்பட்டவைகளை எல்லாம் தனக்குரிமைப் படுத்திக்கொள்ளும் லோபி ஒரு வன் ஒருபொழுதும் மனத்தெளிவு அடையமாட்டான். மாற்சரியம் என்பது பொருமை. பிறர் அடைகின்ற முன்னேற்றத்தைப் பார்த்துச் சகிக்க முடியாமல் பொருமைப்படுபவன் மேலும் மேலும் க்ஷீணதசை அடைகிருன். பிறர் அடைகின்ற நலன்களையெல்லாம்

போற்றிப் பாராட்டுகின்றவன் மேன்மையுறுகின்ருன். பிறர் அடைந்துவரும் நலன்களேக் கண்டு மனம் சகிக்க முடியாதவனுக்கு ஒருபொழுதும் ஆத்ம சாதனத்தில் முன்னேற்றம் வாய்க்காது. இத்தகைய பொருமையானது அடிமைச்சீட்டு எழுதி என்னேத்தனக்குரியது ஆக்கிக் கொண்டதோ (முறியிடுதல்—அடிமைச் சீட்டு எழுதி உரிமையைப் பறித்துக்கொள்ளுதல்) என்று அண்ணல் வினவுகின்ருர். இக்குறைகளேயெல்லாம் தொகுத்து 'மோகமோ, மதமோ, குரோதமோ, லோபமோ முற்றும் மாற்சரியமோதான் முறியிட்டு என்னே ஆட்கொள்ளும்' என்றுஅண்ணல் இயம்புகின்ருர். முறையாகப்பொருளேத் திரட்டி அதைப் பாதுகாத்து வைப்பதும் நல்ல வழியில் செலவிடுவதும் தெய்வ சம்பத்து ஆகும். அதைத் தேடு தற்கு வண்டு வெட்டவெளியில் பறந்தோடுவது போன்று மனிதன் வெவ்வேறு இடங்களுக்கு விரைந்து ஓடவேண் டும். திரைகடல் ஓடியும் திரவியம் தேடு என்பது கோட் பாடு. நிதியம்-செல்வம்; மூசு—மொய்க்கும்; வரிவண்டு-கோடுகளேயுடைய வண்டு; மாகம் ஓடுதல்-வானத்தில் பறந்து செல்லுதல். அல்லும் பகலும் படாத பாடுபட் டுப் பொருள் சம்பாதிக்கும் திறமை தமக்கு இல்லே என் பதை 'நிதியமோ தேடவெனின் மூசுவரிவண்டு போல மாகம் ஓடவும் வல்லன்' என்று இயம்புகிருர். இத்த கைய குறைபாடுகளே உடைத்துள்ள என்னே நீ ஆட் கொள்ளுவாயா என்னும் கேள்வியை எனேயாள வல் லேயோ எனப் பரிவுடன் விண்ணப்பிக்கிருர். வனப்பு யாவும் வாய்க்கப்பெற்ற ராமேசுவரத்தில் எழுந்தருளி இருக்கும் உமாதேவியே, பர்வதராஜனுக்கு இரு கண் மணி போன்று தோன்றிய தாயே என விளிக்கிருர்.

---

## மலைவளர் காதலி - 7.

தூவேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கிநாளுஞ்
சுழலேறு காற்றினிடை அழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவைஎல்லாம்

நாவேற நாவேற வார்த்திக மெனுங்கூற்றின்
நட்பேற உள்ளுடைந்து
நயனங்கள் அற்றதோர் ஊரேறு போலவே
நானிலந் தனில்அலையவோ

வேவேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்

வாவேறு கண்ணியே விடையேறும் எம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

தாயே, நீ ஞான வடிவினள். ஞானப்ரகாசத்தின் எதிரே அக்ஞான திமிரம் அல்லது அறிவின்மை என்னும் இருள் நிலைத்திருக்கமாட்டாது. கண் பெற்றுள்ள மக்கள் கண்ணிருந்தும் கார் இருளில் எதையும் பார்க்கவல்லவர்கள் ஆகமாட்டார்கள். ஆனால் மன்மதனே பிறவிக் குருடன். அவன் காமநோய்க்கு இருப்பிடம். காமத்துக்குக் கண் இல்லை என்னும் கோட்பாட்டுக்கு இலக்காக அவன் அமைந்துள்ளான். அவனுக்கு வாகனமாக அமைந்திருப்பது அறிவின்மை என்னும் இருள். சூரியோதயத்

தில் இரவின் கார் இருள் நிலைமை அறவே அகற்றப் பெறுகிறது. அதுபோன்று என்னை ஈன்றெடுத்த தாயாகிய உன்னை நான் சார்ந்திருப்பேனாகில் மன்மதன் என்னை அணுகமாட்டான். அவனை நீ விரட்டியோட்டிவிடுவாய். கஜமுகன் என்னும் யானை வடிவெடுத்திருந்த அரக்கனை விளையாட்டாக நீ விரட்டியோட்டியிருக்கிறாய். அதை விட உனக்கு மிகச் சுலபமானது மன்மதனுடைய ஆதிக்கத்தை அகற்றித்தள்ளுவது. இக்கோட்பாட்டை வேள் ஏறு தந்தியைக் கனதந்தியுடன் வென்று என்று அண்ணல் இயம்புகின்றார். வேள் என்னும் சொல் மன்மதனைக் குறிக்கிறது. தந்தி என்றால் யானை. மன்மதனுக்கு வாகனமாயிருக்கின்ற அக்ஞான இருள் ஈண்டு ஓர் யானையோடு ஒப்பிடப்படுகிறது. அதே பாங்கில் கனதந்தி என்னும் சொல் வேழமுகம் படைத்த அரக்கனைக் குறிக்கிறது. அன்னை பராசக்திக்கு நறுமணத்தோடு கூடிய பூமாலைகளை அன்பர்கள் அடிக்கடி சூட்டுகின்றனர். இக்கோட்பாட்டை விரையேறு மாலேசூடி என்னும் சொல் தொடர்களைக் கொண்டு தாயுமானவர் விளக்குகின்றார். விரையேறு என்பது நறுமணம் மிகுந்த என்று பொருள்படுகிறது. தாயே! நீ கன்னங்கரேலென்று இருக்கின்ற கூந்தலை உடையவளாய் இருக்கின்றாய். அத்தகைய கூந்தலின் மகிமை பாராட்டுதற்குரியதாக இருக்கிறது. கார்மேகங்கள் விண்ணுலகிலே மேலே மிதந்து சென்று மலைகளின் பள்ளத்தாக்குகளில் மறைந்துபட்டுப் போகின்றன. அப்படி அவைகள் செய்வது உன்னுடைய கூந்தலின் மகிமையைக் காண்பதன் விளைவாக அமைகிறது. உலகத்தவர்களுடைய காட்சியில் கார்மேகங்கள் போற்றுதற்குரிய பெரிய இடம் வகிக்கின்றன. அப்

படித் தற்பெருமை கொண்டுள்ள அம்மேகங்கள் அவை களை விட்ப் பன்மடங்கு மேலான நிலையிலுள்ள உன் கூந் தலின் சிறப்பைப் பார்த்து நாணமடைந்து மலையிடுக்கு களில் சென்று மறைந்து போகின்றன. தெய்வீக அழ கோடு சீர்தூக்கிப் பார்க்குமிடத்துப் பஞ்சபூதங்களால் உண்டுபண்ணப்படுகிற அழகு பொருளற்றதாகிறது என் னும் கோட்பாடு அருமையான பாங்கிலே இந்தச் சொல் சித்திரத்திலே அடங்கியிருக்கிறது. வெற்பு ஏறி என்பது மலையின்மீது ஏறிச்சென்று என்று பொருள்படுகிறது. இக்கோட்பாட்டை 'விண் ஏறு மேகங்கள் வெற்பு ஏறி மறைவு உற வெருட்டிய கருங்கூந்தலாய்' என்ற சொல் லடுக்கில் அருளாளர் அமைத்திருக்கிறார்.

ஒரு மூர்த்தியின் ஞானபரிபாகத்தை அம்மூர்த்தி படைத்துள்ள கண் அமைப்பு விளக்கிக் காட்டுகிறது. ஞானம் வாளோடு ஒப்பிடப்படுகிறது. பொருளற்ற பதர்கள் வாளால் வெட்டித் தகர்க்கப்படுவன போன்று ஞானவாள் பொருள் அற்ற புன்மைகளைச் சிதைத்துத் தள்ளுகிறது. ஞான சொரூபமே வடிவெடுத்துள்ள கண் களை அம்பிகை உடைத்திருப்பதால் வாளேறு கண்ணியே என அன்னையின் அருளுக்குப் பாத்திரமான அண்ணல் இயம்புகின்றார். ஐந்து இந்திரியங்களுள் கண்ணுக்குத் தனிச் சிறப்பு உண்டு. தன் செயலோடு அது நின்று விடாது மற்ற இந்திரியங்களுடைய செயல்களில் கலந்து கொண்டு அவைகளுக்குக் கண் சோபை தருகிறது. எப் படியென்றால் கண்ணார நானே கண்டேன் என்பது கண்ணினுடைய செயல். அந்த வஸ்துவை நான் தொட் டுப்பார்த்தேன். அவன் பேச்சை நானே ஆராய்ந்து பார்த்தேன். அப்பண்டத்தை நானே சுவைத்துப் பார்த்

தேன். அப்புஷ்பத்தின் மணத்தை நானே மோந்து பார்த்தேன். இங்ஙனம் கண்ணின் செயல் பாக்கி நான்கு இந்திரியங்களின் செயல்களுக்குத் துணைபுரிகிறது. சிவனும் சக்தியும் பெயரளவில் இரண்டு மூர்த்திகள். சொரூபத்தில் இருவரும் ஒருவரே. காளை வாகனராகக் கடவுள் கூறப்பெறுகிறார். மன அமைப்பில் சிவமும் சக்தியும் ஒன்றே. இக்கோட்பாட்டை 'விடை ஏறும் எம்பிரான் மனதுக்கு இசைந்த மயிலே' என்ற அடிகளால் போற்றுகிறார். விடை என்னும் சொல் ரிஷபவாகனத்தைக் குறிக்கிறது. அம்பிகையை மயிலே என்று அழைப்பதன் வாயிலாக அவளிடத்துள்ள அழகும் மேன்மையும் மகிமையும் நன்கு விளக்கப்பெறுகின்றன. அன்னை பராசக்தி ஹிமவானுடைய செல்வி. மலையரசனாகிய ஹிமவானுடைய இரண்டு கண்களுக்கு ஒத்தவள். அன்னவன் தவம்புரிந்து ஈன்றெடுத்த குமரித்தாய். இக்கோட்பாட்டை வரைராஜனுக்கு இருகண்மணியாய் உதித்த மலைவளர் காதலிப் பெண் உமையே என அண்ணல் சொல் சித்திரம் பண்ணுகின்றார். வரைராஜனாகிய ஹிமவானால் வளர்க்கப் பெற்றிருப்பதனால் அம்பிகை மலைவளர் காதலி எனப்படுகிறாள்.

கட்டியிருக்கிற வஸ்திரம் எவ்வளவு துப்புரவாயிருந்தாலும் நாள் ஏற ஏற அதில் அழுக்கு ஏறுகிறது. அதற்கு நிகராக மானுடன் படைத்துள்ள உடல் காலக்கிரமத்தில் வினைகளுக்கு உட்படுகிறது. இக்கோட்பாட்டைத் 'தூளேறு தூசுபோல் வினையேறுமெய் எனுந் தொக்கினுள் சிக்கி' என்று அடிகளார் மேனியை வர்ணிக்கிறார். தூசுபோல் என்பது வஸ்திரம் போன்று என்று பொருள் படுகிறது. தொக்கினுள்-தோற்பையினுள்ளே. சிக்கி-அகப்பட்டுக்கொண்டு.

பஞ்சில் தீப்பற்றிக் கொண்டால் அது விரைந்து பரவுகிறது. சேர்ந்தாற் போன்று சுழல் காற்றும் அடித்தால் அந்தப் பஞ்சின் பாட்டைப்பற்றிப் பகருதற்கு ஒன்றுமில்லை. இப்பரிதாபகரமான நிலையில் உள்ள உடலைக் குறித்து 'நாளும் சுழல் ஏறு காற்றினிடை அழல் ஏறு பஞ்சு எனச் சூறையிட்டு' என்று அண்ணல் இயம்புகின்றார். சூறையிட்டு என்னும் பதம் கொள்ளையடித்து என்று பொருள்படுகிறது. மனிதன் திண்ணிய உடல் படைத்திருந்தால் தெளிந்த அறிவை வெளிப்படுத்துவதற்கு அது கருவியாயிருக்கிறது. ஆனால் உடல் முற்றும் தளர்ந்துபோனால் நல்லறிவை வெளிப்படுத்துதற்கு ஏற்ற கருவியாக அது அமையாது. அதற்கு மேல் ஒவ்வொரு நாளும் உடலின்கண் முதுமை வளர்ந்துகொண்டே வருகிறது. அதன் விளைவாக மனிதனுடைய மனத்திட்பம் உடைந்துபட்டுப் போகிறது. இக்கோட்பாடுகளை அறிவை எல்லாம் நாள் ஏற நாள் ஏற வார்த்திகம் என்னும் கூற்றின் நட்பு ஏற உள் உடைந்து என்று அண்ணல் இயம்புகின்றார். வார்த்திகம்-விருத்தாப்பியம்.

கண் இல்லா ஊர்ப்பன்றி சுற்றியலைவது போன்று விருத்தாப்பிய தசையில் கண்களும் பார்வை இழந்து மானுடனொருவன் நிலவுலகில் தள்ளாடி வாழ்ந்திருப்பது பொருந்தாது. இக்கோட்பாட்டை 'நயனங்கள் அற்றது ஓர் ஊர் ஏறு போலவே நான் நிலந்தன்னில் அலையவோ' என்கிறார் அண்ணல். உடல் எடுத்துள்ள மானுடன் உடல் திட்பமும் அறிவுத் தெளிவும் வாய்த்திருக்கும் காலத்திலே அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாக வேண்டும் என்னும் கருத்து இதில் விளக்கப்படுகிறது.

# மலைவளர் காதலி - 8.

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லானபேய்கள்
போராடு கோபாதி ராட்சசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்தமயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைரா சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே.

குறும்பு நிறைந்த சிறுவனொருவன் தொந்தரவுகளையும் தொல்லைகளையும் ஓயாது கொடுத்துக்கொண்டிருப்பானாகில் அவனைப் பேய் என்று பகர்வது வழக்கம். பேய் எனக் கருதப்படுகிற தனி வியக்தி ஏதுமில்லை. பொருந்தாத செயல்களை யாராவது திரும்பத் திரும்பச் செய்துகொண்டிருப்பார்களானால் அவர்களைப் பேய்கள் என்று பொதுமக்கள் அழைக்கின்றனர். பொருந்தாத பாங்கை அடிப்படையாகக் கொண்டு பேய் என்னும் பெயர் வந்துள்ளது. ஆத்ம சாதகனொருவன் பண்பாட்டில் மேலோங்கி வரக் கடமைப்பட்டிருக்கிறான். அதன்

பொருட்டு அவனுடைய கருவி கரணங்களையெல்லாம் அடக்கியாளவும் அவைகளை நல்வழியில் செலுத்தவும் அவன் பழகவேண்டும். அதற்கு மாறுன பாங்குகள் சில இங்கு விளக்கப் பெறுகின்றன. பிரபஞ்ச அமைப்பு பஞ்ச பூதங்களைக் கொண்டது. அவைகள் முறையே ஆகாசம், வாயு, அக்னி, அப்பு, பிருதுவி எனப் பகரப் பெறுகின் றன. இந்த ஐம்பூதங்களுக்கும் ஐந்து தன்மாத்திரைகள் உண்டு. ஆகாசத்தின் தன்மாத்திரை ஓசை. வாயு வின் தன்மாத்திரை ஸ்பரிசம். அக்னியின் தன்மாத்திரை ரூபம். நீரின் தன்மாத்திரை சுவை. நிலத்தின் தன்மாத் திரை மணம். ஐந்து தன்மாத்திரைகளையும் நுகர்வதற்கு ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. ஓசையைக் காது கேட்கிறது. ஸ்பரிசம் அல்லது ஊறு அதனை உடல் முழு தும் உணர்கிறது. உருவத்தைக் கண் பார்க்கிறது. சுவையை நா அறிகிறது. நாற்றத்தை மூக்கு மோந்து பார்க்கிறது. இந்த ஐந்து பூதங்கள் மானுட அமைப் பில் ஒழுங்குப்பாடில்லாதிருந்தால் அந்தப் பூதங்களிட்த் துப் பேய்க்கோலத்தைக் காண்கின்ருேம். இந்திரியங் கள் ஐந்தும் கட்டில் அடங்கியவைகளாக இருக்கவேண் டும். அதற்கு மாருக விஷயாதிகளில் பொருந்தாத போக்கில் இந்திரியங்கள் உலவிக்கொண்டிருக்குமாகில் அந்த இந்திரியங்களுடைய போக்கும் பேய்த்தன்மை யாம். சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். சுவைப் பதற்கு வேண்டியவாறு தின்பண்டம் அகப்படுகிறது. காலவரையறையில்லாது மானுடன் ஒருவன் ஓயாது ஏதாவது பண்டங்களை அருந்திக்கொண்டே இருப்பாஞ கில் நா என்னும் அவனுடைய இந்திரியம் பேய்த்தன் மைப் படைத்ததாகிறது. சுவைப்பதற்கு உறுதுணையா

யிருக்கின்ற நீரும் பேயின் பாங்கு படைத்ததாகிறது. இக்கோட்பாடுகளைத் தொகுத்து 'பூதமொடு பழகி வளர் இந்திரியமாம் பேய்கள்' என்று தாயுமானவர் கூறுகிறார். புந்தி என்னும் சொல் அறிவைக் குறிக்கிறது. அறியும் தன்மை மக்கள் எல்லாருக்கும் ஒரே விதத்தில் அமைவதில்லை.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்பது கோட்பாடு. ஆனால் மெய்ப்பொருளைக் காண்பாரைக் காண்பதுதான் அரிதிலும் அரிது. இவ்வுலகம் நல்லதா? கெட்டதா? என்னும் கேள்வியைக் கிளப்பினால் அறிஞர்கள் பலர் தக்க ஆதரவுடன் பலப்பல பாங்குகளில் இவ்வுலகின் அமைப்பை விளக்கிக் கூறுவார்கள். ஒருவர் கூறுகிற கருத்து மற்றொருவருடைய கருத்தோடு ஒத்திராது. ஆதலால் அறிவின் போக்கை விளக்க வந்த அடிகளார் 'புந்தி முதலான பேய்கள்' என்று பகர்கிறார். பிறர்க்கு ஓயாது தீங்குகளே செய்து கொண்டிருக்கின்ற பிரகிருதிகள் ராக்ஷசர்கள் என அழைக்கப்படுகின்றார்கள். அப்பெயர் தாங்கியுள்ள தனி இனம் ஒன்று உலகில் இல்லை. மக்களுக்கிடையில் ராக்ஷசர்களிருக்கிறார்கள். விலங்கு, பறவை, புழு, பூச்சி ஆகியவைகளுக்கிடையில் ராக்ஷசக் கூட்டத்திற்குப் பொதுநிலை ஒன்று உண்டு. தொட்டதற்கெல்லாம் சினந்துகொள்ளும் இயல்பு ராக்ஷச இயல்பு ஆகும். கோபம் பொல்லாதது. கோபம் பூண்டுள்ள மனிதன் தாற்காலிகமாகப் பைத்தியக்காரன் போன்று நடந்துகொள்கிறான். அவனுடைய மேனி முழுவதும் அப்பொழுது விஷமாக வடிவெடுக்கிறது. விளைவை எண்ணிப்பார்க்காது கைச்சண்டை, வாய்ச்சண்டை ஆகிய

இரண்டிலும் தலை சிறந்தவனாக முன்கோபி ஒருவன் மிளிர்வான். இக்கோட்பாட்டைப் 'போராடு கோபாதி ராக்ஷசப் பேய்கள்' என அண்ணல் இயம்புகின்றார்.

போதம் என்பது நல்லறிவு. ஆத்ம சாதகர்கள் யாண்டும் போதத்தில் திளைத்திருக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஆனால் சில வேளைகளில் அவிவேகம் படையெடுத்து வந்து நல் அறிஞனையும் மயக்க வல்லதாகிறது. நல்லவை கெட்டவை ஆகிய அனைத்தும் அடங்கப் பெற்றிருப்பது பிரபஞ்சம். இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டி பண்ணியவன் சதுர்முக பிரம்ம தேவன். பிரம்ம தேவனுக்குச் சுயம்பு அல்லது தானாகத் தோன்றியவன் என்பது மற்றொரு பெயர். சு ய ம் பு என்னும்சொல் ஜீவாத்மனையும் குறிக்கிறது. ஜீவாத்மாக்களின் தொகையே பிரம்ம தேவன் என அழைக்கப்படுகிறான். வியஷ்டியாயிருப்பது ஜீவாத்மா. சமஷ்டியாயிருப்பது பிரம்மதேவன். இதற்கு மற்றொரு சான்று கூறுவது அவசியம். கடலிலுள்ள தனி அலை ஜீவாத்மனுக்கு நிகர். அலைகளின் தொகையாகிய கடலின் மேல்பரப்பு முழுதும் பிரம்ம தேவனுக்கு நிகர். ஏமாற்றுபவன் வஞ்சகன் எனக் கூறப்படுகிறான். ஏமாற்றும் தன்மை தனி ஜீவனுக்குமுண்டு, தொகுப்பாயிருக்கும் பிரம்மதேவனுக்குமுண்டு. தானே தனக்குச் சுற்றமும், தானே தனக்கு விதிவகையும் என்பது கோட்பாடு. நல்ல மனமுடையவன் நல்லறிவு படைத்தவனாக நல்வழியில் செல்கிறான். கெட்ட மனம் படைத்தவன் கேடுடையவனாகத் தீயவழியில் செல்லும் வஞ்சகனாகின்றான். இக்கோட்பாட்டை 'என் போதத்தை ஊடழித்து வேதனை வளர்த்திட்ச் சதுர் வேத வஞ்சன் விதித்தான்' எனத் தாயுமானவர் கூறுகிறார். வேதனை என்னும் சொல் துன்பம் எனப்

பொருள்படுகிறது. விதித்தல் என்பது இயற்கையின் நியதி. நல்லதன் விளைவு இன்பம். தீயதன் விளைவு துன்பம். இன்ப துன்பமயமாகப் பிரகிருதி சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறது. விதி என்னும் சொல் சிருஷ்டி கர்த்தா வாகிய பிரம்ம தேவனைக் குறிக்கிறது. வினைக்கேற்ற விளைவு என்பது இயற்கையின் விதி. விதியைக் குறித்து யாரும் அஞ்சவேண்டியதில்லை. விதி என்பது நியமம் என்றும் இயற்கையின் நடைமுறை என்றும் காரணத் துக்கேற்ற காரியம் என்றும் பொருள்படுகிறது. மானுட னொருவன் துன்பப்படுவானுனால் அறிவு கெட்டபாங்கில் அவன் நடந்துகொண்டதே அதற்குக் காரணமாகும். இக்கருத்துக்களை யெல்லாம் 'என் போதத்தைஊட்டழித்து வேதனை வளர்த்திட்ச் சதுர்வேத வஞ்சன் விதித்தான்' என்னும் சொல் அடுக்கில் அண்ணல் அமைத்திருக்கிறுர்.

அறியாமையினுல் மானுடன் ஒருவன் வலிய தனக் குத் துன்பத்தைத் தேடிக்கொள்வானுகில் அதே மானு டன் அத்துன்பத்தைத் தவிர்த்து இன்பத்தை நிலைநாட் டவும் வல்லவனுகிறுன். மனதின்கண் திண்மையை உண்டுபண்ணுகிற மேலான எண்ணம் மந்த்ரம் எனப் படுகிறது. திண்ணியனுன பிறகு எண்ணம் எதை யும் எண்ணுது மானுடனொருவன் மனம் அடங்கி யிருப்பானுகில் அப்பொழுது அவன் மௌனநிலையை எட் டியவனுகிறுன். இக்கோட்பாட்டை 'இவ்வல்லலெல்லாம் வீழும் படிக்குனது மௌனமந்த்ர ஆதிக்ய வித்தையை வியந்தருள்வையோ' எனத் தாயுமானவர் விண்ணப் பிக்கிறுர். ஆதிக்ய வித்தை என்பது பரஞானம். ஜனன மரணத்தை அது வெல்லவல்லதாகையால் அதனுடைய ஆதிக்யம் சிறப்பு வாய்ந்தது. 'வியந்தருள்வையோ'

என்னும் சொல் தொடர் மனமகிழ்ந்து ஞானோதயத்தைச் செய்து வைக்கமாட்டாயா? எனப் பொருள்படுகிறது.

அன்னை பராசக்தியானவள் நாத வடிவினளாயிருக்கின்றபொழுது சொற்கள் ஏராளமாக அவளிடத்திருந்து உதிக்கின்றன. மனதை மேலானதாக மாற்றியமைக்கும் ஓசைகள் அல்லது சொற்கள் மந்த்ரங்கள் என்று இயம்பப்படுகின்றன. விரைவில் சாதகனை மேல்நிலைக்கு எடுத்துச் செல்லும் மந்த்ரத்துக்கு மஹாமந்த்ரம் என்றுபெயர். அன்னையின் அருளால் மஹாமந்திரங்கள் கணக்கற்றவைகளிருக்கின்றன. ஆத்ம சாதகர்கள் அவரவருக்குகந்த மந்த்ரங்களை எடுத்து உள்கி அதிவிரைவில் மேன்மையடையலாம். இக்கோட்பாட்டை 'நாத வடிவாகிய மகாமந்த்ர ரூபியே' என்று அண்ணல் இயம்புகின்றார்.

நாதத்தைத் தாண்டிய நிலை ஒன்று உண்டு. எங்கு நாதம் இருக்கிறதோ அங்குப் பிரகிருதி இருக்கிறது. நாதத்தைத் தாண்டிய நிலை நாதாதீதம். ஆங்கு ஓசையும் இல்லை, உலகமும் இல்லை. சொல்லுக்கு அது எட்டாத நிலை. மௌனமே அங்கு நிலவுகிறது. அந்நிலை சிதாகாசம் எனவும் சிதம்பரம் எனவும் இயம்பப்படுகிறது. அதில் லயமாகிற ஜீவாத்மா கைவல்ய முக்தி அடைகிறான். திரும்பவும் ஜீவவியக்திக்கு அன்னவன் வருவதில்லை. அதை முன்னிட்டே சிதம்பரம் போனவன் திரும்பி வருவதில்லை என்னும் கோட்பாடு வடிவெடுத்தது. 'நாதாந்த வெட்ட வெளியே' என அண்ணல் இயம்புகிறார்.

சமயங்கள் பல இருக்கின்றன. உடலுக்குப் புஷ்டி தரும் உணவு வகைகள் பல இருந்தும் அவைகளுக்கிடை

யில் முரண்பாடு இல்லை. அவை யாவையும் பொதுவாக உணவு என்கிறோம். அதே விதத்தில் மக்களுடைய மனப் பாங்குக்கும் ஐதிகத்துக்கும் ஏற்பச் சமயங்கள் பல இருக் கின்றன. ஒவ்வொரு சமயமும் அதனதன் போக்கில் மனி தனைப் பண்படுத்துவதால் அச்சமயங்களனைத்தும் நற் சமயம் என்னும் பொதுப் பெயர் பெறுகின்றன. பூமியில் பயிர் தழைப்பதற்கு மழை தேவையாயிருக்கிறது. அதே விதத்தில் பரதத்துவத்தின் வளர்ச்சிக்குச் சமயம் தேவை யாயிருக்கிறது. பரதத்துவம் அன்னை பராசக்தியின் சொரூபத்தினின்று வடிவெடுக்கிறது. ஆதலால் ஜட வுலகில் மேகம் செய்கின்ற செயலை அருள் உலகில் அம்பிகை செய்கின்றாள். இக்கோட்பாட்டை 'நற்சமய மான பயிர் தழைய வரு மேகமே' என்று தாயுமானவர் கூறுகின்றார்.

பரவஸ்துவுக்கு விளக்கம் தருகிற உபநிஷதம் அதை சத்யம், சுந்தரம், ஞானம், அனந்தம் என்று இயம்பு கிறது. தோற்றத்துக்கு அப்பாலுள்ள பரவஸ்து தோற் றத்துக்கு வருகிறபொழுது அதில் ஒழுங்குப்பாடும் மகிமையும் கவர்ச்சியும் சேர்ந்து அமைந்திருக்கின்றன. அது அழகின் பாங்கு. அழகுக்கு எடுத்துக் காட்டு மயில். ஆதலால் பரவஸ்துவை அம்பிகை சொரூபமாகக் கருதி 'ஞான ஆனந்த மயிலே' என்று அண்ணல் இயம்பு கின்றார்.

சமயத்தைப் பற்றி ஆராய்ச்சி பண்ணுமளவு மனத் தெளிவு உண்டாகிறது. சமயங்களுக்கிடையில் வேற்றுமை பாராட்டுகிறவர்கள் தாங்கள் அனுஷ்டிக்கிற சமயத்தைச் சுய சமயம் என்றும் பிறர் அனுஷ்டிக்கிற சமயங்களைப் பரசமயம் என்றும் பேதம் பாராட்டுகின்றனர். அதோடு

அவர்கள் நின்று விடுவதில்லை. தாங்கள் அனுஷ்டிக்கிற சமயமே குறியின்கண் சாதகர்களை எடுத்துச் செல்லுகிறது என்றும் ஏனைய சமயங்கள் மக்களை எங்கெங்கேயோ வழி பிசகிப்போகும்படி செய்துவிடுகின்றன என்றும் குதர்க்கம் பண்ணுகின்றனர். அந்த மனப்பான்மை சமய அனுஷ்டானத்துக்கு ஒவ்வாது. சத்தியத்தை முறையாக நாடுகிறவன் எங்கெல்லாம் சத்தியம் நிலவுகிறதோ அதை உள்ளபடி ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். விவாதத்தின் மூலமாகச் சத்தியத்தை மறைத்து வைப்பவன் சத்தியத்தினின்று வழுவியவனாகின்றான். அப்படி வழுவியவனுக்கு மெய்ப்பொருள் ஆராய்ச்சி கிட்டமாட்டாது. ஆணவமும் அகங்காரமுமே வீண் விவாதத்தினின்று வடிவெடுக்கின்றன. தான் அனுஷ்டிக்கிற சமயத்தில் உறுதியாக ஈடுபட்டிருப்பதற்கிடையில் மற்றவர்களுக்கும் அவரவர் சமயத்தில் ஆழ்ந்து செல்லுவதற்கு உதவிபுரிதல் வேண்டும். அப்படிச் செய்வதன் வாயிலாகப் பெரிய பொருளாகிய அன்னையின் மகிமையை உள்ளபடி அனுபூதியில் உணர்கிறார்கள். சமரசம் காணாதவர்கள் நெறியினின்று பிறழ்பவர்கள் மட்டுமல்லர்; பரவஸ்துவை அனுபூதியில் அறிந்துகொள்ளத் தகுதியற்றவர்களுமாகிறார்கள். இக் கோட்பாட்டை 'வாதடுமி பரசமயம் யாவுக்கும் உணர்வரிய மகிமைபெறு பெரிய பொருளே' என்று அடிகள் இயம்புகின்றார்.

---

